


# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

KALKI • 20.4.2008 • ரூ.10.00 • 112 பக்கங்கள்



இந்த இதழில்
112
பக்கங்கள்

குஜராத் டேட Exclusive

# மோடி அதிரடி பேட்டி


மகளிருக்கான சிறப்புத் திட்டம்
STAR MAHILA
Gold Loan
தங்க நாணயங்கள், நகைகள்
வாங்கிட சுலப கடன் உதவி
தங்க நாணயங்கள் மற்றும் தங்க நகைகள் வாங்குவதற்கான சுலப கடன்.
குறைந்த வட்டி வீதங்களில்.
ரூ. 50,000 முதல் ரூ. 2,00,000 வரை கடன் உதவி.
பேங்க் ஆஃப் இந்தியாவின் எல்லா கிளைகளிலும் 5,8,20,50 கிராம்களில் பல வடிவங்களில் தங்க நாணயங்கள் கிடைக்கின்றன.
999.9 சுத்த,நேர்த்தியான,சான்றிதழுடன்.
Bank of India
சேவையைக் கடந்த நேசமிகு உறவுகள்


அனைத்திலும் BEST!
தங்கத்தின் தரம், டிசைன், வாடிக்கையாளர்
சேவை மற்றும் பரந்து விரிந்த கார்
பார்க்கிங்குடன்கூடிய தாராளமான
ஷாப்பிங் வசதிகள் என
அனைத்திலும் Best – ஆக திகழ்கிறது
தி சென்னை சில்க்ஸ் ஜுவல்லரி மஹால்.
The Chennai Silks
Jewellery Mahal
இந்தியாவின் தன்னிகரற்ற தங்கமாளிகை
தி.நகர், சென்னை - 17. Ph : 044-24330888
Shop online at www.sktm.in



## ஸ்பீட் போஸ்ட்

குஜராத்தில் சிரஞ்சீவித் திட்டத்தால் தாய்மார்களும், குழந்தைகளும் சிரஞ்சீவியாக இருப்பது போற்றத்தக்கது.

**- கௌசல்யா ராகவன், சென்னை - 44**

# சுவாரஸ்யமான

'குஜராத் டுடே' என்ற பெயரில் வெளிவந்த கட்டுரைகளைப் படித்துப் பார்த்தேன். தமிழகத்தின் மின்சாரத் துறையையும், குஜராத் மின்சாரத்துறையையும் ஒப்பிட்டிருந்தது; அரசுத்துறை ஊழியர்கள் கர்மயோகி யோஜனா பயிற்சி மூலம் பயனடைந்தது பற்றிய கட்டுரைகள் நன்றாக இருந்தன. ஆனால், அதைத் தொடர்ந்து வந்த இரண்டு வார கட்டுரைகளும் கோத்ராவின் பழைய முடிந்துபோன செய்தியைக் கொண்டுவந்து, இந்துக்களும், முதல்வர் மோடியும் மனிதத்தன்மையற்ற காட்டுமிராண்டிகள் போலவும், முஸ்லிம்கள் இந்துக்களுடன் அண்ணன் தம்பியாக வாழ விரும்புவது போன்றும், இந்துக்கள் மட்டும் அந்தச் சிந்தனை அற்றவர்கள் போலவும் சித்திரித்தன. ஆனால், பிரச்னைக்கு ஆரம்ப காரணம் யார்? எத்தனை காலமாக இந்துக்களுடன் முஸ்லிம்கள் சகோதரர்களாக வாழ விரும்பினார்கள், அதை இந்துக்கள் உதாசீனப்படுத்தினார்கள் என்று தங்களால் கூற முடியுமா?

**- சு.வெள்ளையப்பன்**
**கோட்ட அமைப்பாளர்,**
**இந்து முன்னணி, வேலூர் - 4**

(திரு. வெள்ளையப்பன் தமது மிக நீண்ட கடிதத்தில், குஜராத்துக்குத் தொடர்பில்லாத வேறு பல விஷயங்கள் குறித்தும் தமது கருத்துகளை விரிவாக எழுதியுள்ளார். கல்கி பத்திரிகையைப் பொறுத்தமட்டில், குஜராத் பயணத்தின்போது நடுநிலை நோக்கில்தான் இயங்கியிருப்பதாக முழுமையாக நம்புகிறோம். இருப்பினும், இந்து முன்னணி, ஆர்.எஸ்.எஸ்., பா.ஜ.க. போன்ற இந்துத்வா அமைப்புகளைச் சேர்ந்தோருக்குச் சில அம்சங்களில் கருத்து மாறுபாடு இருப்பது இயல்பே.

- ஆர்)

'வாரம் ஒரு பாசுரம்' படித்து, எப்படி இருந்த காவிரி இப்படி ஆகிவிட்டது என வருந்தினேன்.

**- கே.எஸ்.கோவர்த்தனன்,**
**சென்னை - 42**

பருவுக்கும் மருவுக்குமிடையே உள்ள வித்தியாசம், சுவாரஸ்யம்.

**- கே.வி.ராமன், சென்னை - 73,**

அடேங்கப்பா! குஜராத்தில் இத்தனை ஐ.ஏ.எஸ். தமிழர்களின் பங்களிப்பா! புல்லரிக்க வைக்கும் பெருமை நமக்கு!

**- அனன்யா, திருச்சி**

மெட்ராஸா... மெல்போர்னா... கட்டுரையைப் படித்தேன். பொதுவாக, ச.ந.கண்ணனின் கட்டுரையில் நிறைய தகவல்கள் கிடைக்கும்; உண்மையாகவும் இருக்கும்.

**- எம்.இராஜேந்திரன், லால்குடி**

கல்கி ராஜேந்திரனிடம், "எதுக்கு சார்

மக்களால், மக்களுக்காக தேர்ந்தெடுக்கப்படுபவைதான் எல்லா அரசும். குஜராத் அதில் ஒளிர்கின்ற மாநிலம் என்றால் மிகையில்லை!

- ஆர்.பிரகாஷ், பொன்மலை

# வித்தியாசம்!

இவ்ளோ சீக்கிரம் தொடரை முடிச்சிட்டேள்?'' என்று மிகவும் வருத்தத்துடன் கேட்கின்றோம்!

- வே.ந.கதிர்வேல், வேலூர்

இஸ்லாத்தைப்பற்றிய தவறான எண்ணங்கள் இருக்கும் இக்காலகட்டத்தில், 'பெண்களும் 'தலாக்' சொல்லலாம்?' என்ற கட்டுரையை வெளியிட்ட கல்கிக்கு மிக்க நன்றி.

- தவ்லத் நிஷா கல்தான், சென்னை - 50

'வளம் சேர்க்கும் வளைக்கரங்கள் பெண்ணின் பெருமையை விளக்கியது.

- வி.எஸ்.கீர்த்தனா, ஈரோடு

இந்திய அரசின் கவர்ச்சி பட்ஜெட்டின் பின் இருக்கும் கசப்பான நிஜங்களை, தலையங்கத்தில் படித்தபின், எங்க தூக்கமே போச்சு!

- எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

இவ்விதழின் சிறப்புப் பக்கங்களை (41 - 72) தனியே பிரித்தெடுத்து 'மீனாக்ஷிக்கு மங்களம்' என்ற புத்தகமாக 'பின்' செய்து பாதுகாத்து வையுங்கள். அமரர் கல்கியின் பார்த்திபன் கனவு பக்கம் 40லிருந்து பக்கம் 73ல் தொடர்ந்து இடம் பெறுகிறது.

வாசகர்களுக்கு மனமார்ந்த **தமிழ்ப்புத்தாண்டு வாழ்த்துகள்.**

(ஆசிரியர்)


# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : சீதா ரவி

தலைமை உதவி ஆசிரியர் : மு.மாறன்

வடிவமைப்பு : எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்

தொலைபேசி : 4343 8888, 2225 1522, 2225 0623, 2225 1324,

தொலைநகல் : 044 - 22251021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 68 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# புஷ்பவனம் குப்புசாமி -அனிதா குப்புசாமி



# தேடி வந்த சுபசகுனம்!

**நா**ன் இவரைத்தான் (புஷ்பவனம் குப்புசாமி) காதல் மணம் செய்து கொள்ளப் போகிறேன் என்று தலையில் எழுதியிருப்பது அப்போது எனக்குத் தெரியாது. இசைத் துறையில் முதுகலை படிக்க வேண்டுமென்றால் சென்னை பல்கலைக் கழகத்தில்தான் படிக்க முடியும். அங்கு அவருக்கு, 'தஞ்சாவூரு மண்ணு எடுத்து' பாடல் பேர் வாங்கிக் கொடுத்திருந்தது. தமிழ்க் கிராமியப் பாடல்களின் நறுமணத்தை அன்றுதான் உணர்ந்தேன். இப்பவாவது மனுஷன் கண்ணுல பார்க்கற மாதிரி இருக்கிறார். ஆனால், அப்ப பார்க்கணுமே சாமி!

**நா**ங்கள் ஜமீன் பரம்பரையைச் சேர்ந்தவர்கள். உ.பி.மாநில லக்னோதான் எங்க ஊர். அகர்வால் வம்சமான எங்கள் கொள்ளுத்தாத்தா, பாட்டி எல்லாரும் சம்பல் பள்ளத்தாக்குக் கொள்ளையர்களின் வன்முறைக்குப் பலியாகிட்டாங்க. கத்தியால குத்திக் கொன்னுட்டாங்க. துப்பாக்கி வராத காலம் அது. ஆனால், குழந்தைகளைக் கொல்வது பாவம்னு விட்டுட்டாங்க. அந்த ஊர்ல தொடர்ந்து வாழ முடியாதென்று எங்க தாத்தா சிறு வயதிலேயே பிழைப்புக்காக, கோயமுத்தூர் மாவட்டத்துக்கு வந்துட்டாங்க.

நான் பிறந்து வளர்ந்தது எல்லாமே மேட்டுப்பாளையத்தில்தான். என் பெற்றோர்கள் கைலாஷ் சந்த் கர்க் - ஊர்மிளா தேவி. நாங்கள் அவர்களுக்கு வாரிசுகளாக மொத்தம் ஏழு பெண்கள், ஓர் ஆண். நான் இரண்டாவது பெண். என் அக்காவுக்குத் திருமணம் செய்து கொடுத்துவிட்டார்கள். எங்கள் வம்சத்தில் யாரும் அதிகம் படித்ததில்லை. ஆண்களையேகூட பள்ளிப்படிப்புக்கு மேல படிக்க வைக்க மாட்டார்கள். வியாபாரத்தைக் கற்றுக்கொடுத்து முதலீடும் செய்து கொடுத்துவிடுவார்கள். நான் மட்டும்தான் முதல்முதலாகக் கல்லூரிப் படிப்பை எட்டியவள். அந்தக் கதையை நினைச்சா இப்பகூடச் சிரிப்பு வருது. எட்டாம் வகுப்பு படித்துக்கொண்டிருக்கும்போது ஒரு வரன் வந்தது: பணக்கார மாப்பிள்ளை. 'இதுவரை நீ படிச்சது போதும்'னு சொல்லி, என்னை எட்டாம் வகுப்போடு நிறுத்திக்கொள்ளச் சொன்னார்கள். ஏனென்றால், மாப்பிள்ளைப் பையனே பத்தாம் வகுப்பு வரைதான் படித்திருந்தார்.

எனக்குச் சிறு வயதிலிருந்தே இசை மீது நிறைய ஆர்வமிருந்ததாலே அழுது ஆர்ப்பாட்டம் பண்ணி அந்தக் கல்யாணத்திலிருந்து தப்பித்தேன்.

பாட்டுப் பாடறதுதான் எனக்கு உயிர் மூச்சு. ஆனால், ரொம்பக் கட்டுப்பாடான குடும்பம் எங்களுடையது. ஆடறதும் பாடறதும் நல்ல குடும்பத்துப் பெண்

# மனசெல்லாம் மண்வாசம்-2

களுக்கு ஆகாதென்று எங்க தாத்தா தடை போட்டுவிட்டார். என் அம்மாவுக்கு நல்ல குரல்வளம் இருந்தது. அதனால, அம்மா மட்டும்தான் என் இசை ஆர்வத்துக்கு ஆதரவா இருந்தாங்க.

'ஹம் கிஸிசே கம் நஹி', 'குர்பானி' போன்ற திரைப்படப் பாடல்கள் அன்று பிரபலமாக இருந்தன. 'அன்னக்கிளி' என்று ஒரு தமிழ்ப் படம் வெளி வந்தது. அதன் பிறகுதான் தமிழ்த் திரைப்படப் பாடல் களைப் பாடத் துவங்கினேன். கிராமியப் பாடல்கள் என்றால் என்னவென்று 'அன்னக்கிளி' பாடல்கள் மூலம்தான் எனக்குத் தெரிய வந்தது.

'அன்னக் கிளி உன்னைத் தேடுதே
ஆறுமாசம் ஒரு வருசம்
ஆவாரம் பூ மேனி வாடுதே...'

என்றும்,

'மச்சானைப் பார்த்தீங்களா
மலைவாழைத் தோப்புக்குள்ளே...'

என்றும் பாடிக்கொண்டே இருந்தேன்.

திரைப்படத்தில் பின்னணி பாடகி யாகத்தான் எனக்கு விருப்பம் இருந்தது. சாஸ்திரிய சங்கீதத்தில் அவ்வளவு நாட் டமில்லை. பள்ளி அளவில் எந்தப் பாட்டுப் போட்டிக்குச் சென்றாலும் நான்தான் முதல் பரிசு பெறுவேன். இதிலே ஒரு வேடிக்கை என்னன்னா, இரண்டாவது





பரிசை என் தங்கை கவிதா தட்டிச் சென்று விடுவாள். எங்கள் பள்ளியில் எங்களைத் தவிர யாரும் போட்டியில் கலந்து கொள்ள மாட்டோம் என மறுத்தார்கள். ஏன் என்று கேட்டால், 'முதல் இரண்டு பரிசுகளையும் அக்காவுக்கும் தங்கைக்கும் எடுத்து வைத்து விடுவார்கள். பிறகு, எந்தப் பரிசை நாங்கள் வாங்குவது?' என்று சொல்வார்கள். அதன் பிறகு எங்கள் பள்ளியில் பாட்டுப் போட்டிக்கு எங்களை நடுவர்களாக இருக்கச் சொன்னார்கள்.

என்னுடைய இசை ஆர்வத்தை அங்கீகரித்த என் அம்மா, என் இசை வகுப்புக்குப் பள்ளியிலேயே ஏற்பாடு செய்தார்- வீட்டுக்குத் தெரியாமல் தான்! இசை வகுப்புக்குப் போய் வருகின்ற நாளில் ஸ்பெஷல் கிளாஸ் இருந்ததாகச் சொல்லி அம்மாவே எனக்குத் துணையிருந்தார். தங்கம் டீச்சர் எனக்குப் பாட்டு சொல்லித் தந்தார். வீட்டுக்கும் அவ்வப்போது வந்து இசை வகுப்பு எடுப்பார். சிறுவர்கள் ஓடி ஒளிந்து விளையாடுவதுபோல நடக்கும் அந்த வகுப்பு. அம்மா எனக்காக வாசலில் காவல் இருப்பார். என் தாத்தாவோ, அப்பாவோ வந்தால், 'வராங்க வராங்க' என்று குரல் கொடுப்பார். 'ஸபஸ' என்றுகூடச் சொல்லியிருக்க மாட்டேன். உடனே தடால் புடால் என்று ஆர்மோனியப் பெட்டியை எல்லாம் ஒளித்து வைத்து விடுவோம்.

கல்லூரியில் இளங்கலை இசை படித்தது ஒரு சுவாரஸ்ய அனுபவமாக இருந்தது. என் பள்ளி ஆசிரியை, நண்பர்கள் ஆலோசனையின்படி கோவை அவிநாசிலிங்கம் மகளிர் பல்கலைக் கழகத்தில் பி.ஏ. இசைத் துறையில் சேர்ந்தேன். ஆனால், நான் சேர்ந்த ஆண்டு இசைத் துறையையே நீக்கி விட்டார்கள். எனக்கு இசை வகுப்பு நடத்திய பேராசிரியை பி.எஸ். சரோஜா அவர்கள்தான் எனக்காகப் பரிந்துரை செய்து போராடி, அந்த ஆண்டும் இசைத் துறை தொடர்ந்து இருக்கச் செய்தார்கள்.

எங்கள் குடும்பத்தில் எந்த விசேஷம் நடந்தாலும் டோலக்குப் பாடல் பாடுவார்கள். தென்னிந்திய கிராமியப் பாடல்களைப் போலவே வட இந்தியர்களின் இந்த டோலக்குப் பாடல் புகழ் பெற்றது. முதலில் சாமி பாட்டில் ஆரம்பித்து, கடைசியாக சாமி பாட்டிலேயே நிறைவடையும். அவற்றை 'லோக் கீத்' என்று சொல்வார்கள். லோக் கீத் என்றால் மக்களிசைப் பாடல். இங்கே கிராமியப் பாடல்களை நாட்டுப்புறப் பாடல் என்கிறார்கள். அது தவறு. மக்கள் இசைப் பாடல்கள் என்று சொல்வதுதான் சரியானது. திருமண நிகழ்ச்சிகளில் பாடுகின்ற பாடல் மிக அழகான பாடல்.

'பர்லீக்கோ பர்னாலே பெஹலேலே ப்யார்த்தா
- ஜியா பேக்கராரு தா,
ஆஜ் பீ ஹே ஒருகல்பீ ரஹேகா'

'பொண்ணுக்கு மாப்பிள்ளை மேல் முன்பிருந்தே காதல்
- அதை மறைத்தாள்.
இன்னிக்கும் காதல் உண்டு, என்றும் இருக்கும்'

- இப்படி நிகழ்ச்சிகளில் பாடுவது சுப சகுனம் என்று சொல்வார்கள். என் வாழ்க்கையிலும் ஒரு சுபசகுனம் வந்தது.

**(அடுத்த வாரம் புஷ்பவனம் குப்புசாமி)**

**படங்கள்: ஸ்ரீஹரி**






● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

? கோஷ்டிப் பூசல்தான் காங்கிரஸ் கட்சியின் வளர்ச்சிக்குத் தடையாக உள்ளது என்று கடைசியில் சோனியா காந்தி ஒப்புக் கொண்டு விட்டாரே?

! பாதிகிணறு தாண்டியிருக்கிறார்! உட்கட்சி ஜனநாயகம் வளம் பெறச் செய்தால் முழுக்கிணறு தாண்டியவராவார்.



● ஜோ.பன்னீர் செல்வம், சென்னை - 12

? 'பெங்களூரில் திருவள்ளுவர் சிலை திறக்கப்படும் வரை அங்கு எந்த நிகழ்ச்சிக்கும் செல்ல மாட்டேன்' என்று தமிழக முதல்வர் சொல்லியிருக்கிறாரே?

! வீண் சபதம். பெங்களூரில் இதற்காக யாரும் வருத்தப்படப் போவதில்லை. 'நீங்கள் வள்ளுவரைக் கொண்டாடாவிட்டால் என்ன, நாங்கள் கன்னட கவிகளைக் கொண்டாடுகிறோம்' என்று இங்கே ஓரிருவருக்குச் சிலை நிறுவிச் சீராட்டினால், கன்னட இதயங்கள் கனியும்.

● என்.மாணிக்கம், மின்னல்

? மலிவு விலை அரிசி மற்றும் இலவசமாக வழங்கும் பொருட்களை விற்றுப் பணம் சம்பாதிக்கும் மக்களை ஆண்டவன் மன்னிப்பாரா?

! மன்னிக்க மாட்டார் என்பது அவர்கள் அகப்பட்டுக்கொள்வதிலிருந்தே தெரிய வருகிறதே!

● என்.காளிதாஸ், சிதம்பரம்

? 'அப்பாவிகளை நாங்கள் கொல்வதில்லை' என்கிறாரே அல் கைதா தளபதி அல் ஜவாஹிரி?

! ஸாரி, தவறாக ரிப்போர்ட் ஆகிவிட்டதுங்க... 'அப்பாவிகளைத் தவிர வேறு யாரையும் நாங்கள் கொல்

✱ உதவாத கோடிகள்!

✱ பாவம், வள்ளுவர்!



# நதிகளுக்காக நடிகர்கள் நூறு கோடி?



* விற்றதும் பெற்றதும்!



* பாதிக் கிணறு!

வதில்லை' என்று திருத்தி வாசித்துக் கொள்ளவும்.

● ச.நாகரத்தினம், திருப்பூர்

*? நிர்வாகச் சீரமைப்புக்காக மொழிவாரியாகப் பிரிக்கப்பட்ட மாநிலங்களில் இனவெறி வரக் காரணம் என்ன..?*

! மொழிவாரி பிரிவினைக்கு முன்பு நிர்வாகம் நடக்காமலா போய்விட்டது? இன்றுள்ளதைவிடச் சிறப்பாகவே நடந்தது. நிகழ்ந்தது பிரதேச மொழி ரீதியான பிரிவினை. இதற்குத் தலைவர்கள் இசைந்திருக்கவே கூடாது.

● லெ.நா.சிவகுமார், சென்னை-33

*? நதிகளை தேசியமயமாக்க, திரையுலகத்தினர் சார்பில் நூறு கோடி ரூபாய் தரத் தயாராக இருப்பதாக சரத்குமார் பேசியிருப்பது பற்றி...?*

! தேசியமயமாக்க கோடிகள் தேவையில்லை. நதிகளை இணைக்கத்தான் கோடிகள் தேவை. முதலில் நாடாளுமன்றத்தில் சட்டம் நிறைவேற வேண்டும். அதற்குக் கோடிகள் உதவாது. மன இணக்கம்தான் தேவை. அதற்கு சரத்குமார் உழைக்கட்டும்.

● ஜி.வி.எஸ்.மணியன், திண்டுக்கல்

*? ஜனநாயக அடிப்படையிலான ஆட்சிமுறையைக் கொண்டுள்ள இந்தியா, கம்யூனிஸ அடிப்படையிலான ஆட்சிமுறையைக் கொண்டுள்ள சீனாவைவிட, பொருளாதார முன்னேற்றத்தில் பின்தங்கியிருப்பது ஏன்...?*

! ஏனென்றால் கம்யூனிஸ்ட் சீனாவின் ஆதிக்க (ஃபாஸிஸ) நிர்வாகம் இங்கே விலை போகாது. கொஞ்சம் லகானை இழுத்தாலே, குரல் வளையை நெரிப்பதாக எதிர்க்கட்சிகள் கூக்குரல் எழுப்பும். இந்தியாவின் அழகும் பலமும் இதுதான். சீனாவின் 'லோ காஸ்ட்' முன்னேற்றத்தின் விலை இந்தச் சுதந்திரம்தான்.

● ஜி.நீலகண்டன், பெங்களூரு

*? பெண்கள் புடைவையைப் பற்றிப் பேசக் கூடாது என்று ஓர் அவசர சட்டம் கொண்டு வந்தால், அவர்களுடைய பேச்சு எத்தனை சதவிகிதம் குறையும்?*

! குறையாது; கூடும். அந்த அவசர சட்டத்துக்கு எதிரான பேச்சு அதிகரிக்கும். புடைவைக்கு மவுசு ஏறும்!

● எம்.சிவகுருநாதன், தஞ்சை

*? அண்மையில் வெளியிடப்பட்ட அத்வானியின் சுயசரிதை புத்தகம் அத்தனையும் விற்றுத் தீர்ந்து விட்டதாமே?*

! ஆச்சர்யமென்ன? ஆதரவாளர்களான சங்க் பரிவார் உறுப்பினர்களுக்கு இருக்கும் ஆர்வத்தைவிட, எதிர்தரப்பினருக்கு அதிகம் ஆர்வம் இருக்குமே - என்ன எழுதியுள்ளார்; எங்கே குற்றம் கண்டுபிடிக்கலாம் என்பதை அறிய!

● பி.மகேஷ், திருச்சி - 17

*? நூற்றுக்கணக்கில் ஆட்*



குறைப்பு செய்யப்படுவர் என்றவுடன் ஃபிரான்ஸில் மிட்டல் ஆஃபீஸில் அடாவடித்தனம் செய்த தொழிலாளர்களின் செயல் பற்றி...?

! அயல்நாட்டு உரிமையாளர் வந்ததுமே ஆட்குறைப்புச் செய்கிறார் என்கிற இயல்பான கூடுதல் வெறி அவர்களிடத்தில் நிச்சயம் இருக்கும். அதற்காகவேனும் நிர்வாகம் சற்று சிந்தித்துச் செயல்பட்டிருக்கலாம்.

● ச.மீனாட்சி சுந்தரம்,
சென்னை - 101 □

? பங்களாதேஷ் விடுதலையை ஆதரித்த இந்தியா, திபெத் விடுதலையை ஆதரிக்காதது ஏன்?

! தலாய்லாமாவுக்கு அடைக்கலம் தந்திருப்பதே நமது அனுதாபம் எங்கே - யாரிடம் என்பதை உணர்த்தும். ஆனால், அனுதாபத்தை வெளிப்படை ஆதரவாக மாற்றுவதற்குச் சந்தர்ப்ப சூழ்நிலைகள் ஒத்துழைக்க வேண்டும். பங்களாதேச விடுதலைக்கு இந்திராகாந்தி துணிந்து உதவியது போன்ற சூழல், திபெத் விஷயத்தில் இல்லை.

● க.நா.இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்

? ராவல்பிண்டி எக்ஸ்பிரஸ் சோயப் அக்தருக்கு, ஐந்து ஆண்டுகள் கிரிக்கெட் விளையாடத் தடை விதித்துள்ளதே பாகிஸ்தான் கிரிக்கெட் வாரியம். இது நியாயம்தானா..?



★ தடம்புரண்ட ரயில்!



★ பெருகும் பேச்சு!

! எவ்வளவு ஃபாஸ்ட் எக்ஸ்பிரஸாக இருந்தாலும் அதற்கென ஏற்பட்ட தண்டவாளத்தில் போகிறவரையில்தான் மதிப்பு. 'ராவல்பிண்டி', அடிக்கடி தண்டவாளத்தை விட்டு இறங்கி தடுமாறும் எக்ஸ்பிரஸ்.

● அ.சுகுமார், காட்பாடி

? சென்னையில் தங்கத்தேர் என்ற பெயரிலும் சொகுசு பேருந்துகள் விடப்பட்டுள்ளனவே?

! 'நடுத்தர மக்களால் இனி தங்கம் வாங்க முடியாது. பாவம்! தங்கத் தேரிலாவது பவனி வரட்டுமே' என்கிற எண்ணத்தால் அப்படிச் செய்திருக்கலாம்.

● லலிதா செல்லப்பா,
சென்னை - 75 ★

? வரும் கல்வி ஆண்டு முதல் பள்ளியில் யோகா பாடம் நடத்தப்படும் என்று சட்டசபையில் அறிவித்திருக்கிறார்களே... இது படிப்பின் தரத்தை உயர்த்துமா? இல்லை, மேலும் ஒரு சுமையை இளம் உள்ளங்களில் புகுத்துமா?

! யோகா வேறு; யோகாசனங்கள் வேறு. யோகாசனப் பயிற்சி சரியான முறையில் அளிக்கப்பட்டால் மன, உடல் ஆரோக்கியம் காக்கப்படும். அதன் உடன்விளைவாக, படிப்பிலும் ஊக்கம் மிகும். பயிற்சியாளர்களின் தரம் மிக முக்கியமானது. ●



● **ஆர்.ஆர்.கோபாலன்,**
**மேற்கு மாம்பலம்**

***தாம்பத்ய சங்கீதத்தின் 'ராகம்' எது..?***

கணவன் - மனைவி இருவரும் சேர்ந்து 'டூயட்'டாகப் பாடினால், 'கூடலான - ஆனந்த - பைரவி'. இருவரும் தனித் தனியே 'ஸோலோ'வாகப் பாடினால், 'ஊடலான - மத்யமாவதி'. 'ஸோலோ' பாடும் இருவரில் யாராவது ஒருவர் பக்க வாத்தியம் வைத்துக்கொண்டால், அது தாம்பத்ய கச்சேரிக்கு மங்களம் பாடும், 'மூடலான - முகாரி'யில் முடியும்...

● **ஆர்.ராஜலட்சுமி, விழுப்புரம்**

***மார்ச் 8, மகளிர் தினம்... ஆடவர் தினம் என்றைக்கு?***

அதே மார்ச் 8தான். அன்று மகளிர் தினத்தைக் கொண்டாட மகளிர் எல்லோரும் போய்விடுவார்கள். ஆடவர்கள் தலை விரித்து ஆடுவோர்களாக இருக்கலாம்!

● **ஆர்.கே.லிங்கேசன்,**
**மேலக்கிருஷ்ணன் புதூர்**

***தெனாலிராமன், விக்கிரமாதித்தன் போன்றோர் தற்போது வாழ்கிறார்களா...?***

முக மலர்ச்சியே தெனாலிராமன்... மன முயற்சியே விக்கிரமாதித்தன்!

● **மாளவிகா, சென்னை**

***ஜாலியாக ஒரு 'ஹைகூ' சொல்லுங்கள்...***

'தமயந்தி பரிமாறிய
நள பாகத்தில்
அன்னம்
தூதாக (இந்தியில் பால் போல)
இருந்தது...'

● **கு.அருணாசலம், தென்காசி**

***பானை பிடித்தவள் பாக்கியசாலி... கரண்டி பிடித்தவள்...?***

பலசாலி! முன்னெச்சரிக்கையாக ஹெல்மெட் போட்டுக்கொண்டு, குறை ஏதும் சொல்லாமல் அவள் போட்டதை வாயைத் திறக்காமல் கொட்டிக்கொண்டு, கையை ஆஃபீஸுக்குப் போய் அலம்பிக் கொள்ளுங்கள்.

● **தஞ்சை செல்வன், பிரியம்மாள்புரம்**

***நீங்கள் அதிகம் விரும்பிக் குடிப்பது, 'பீரா', 'பிராந்தியா', 'விஸ்கியா', 'ஒயினா', 'ரம்மா'?***

சில சமயம் கு'பீரென்று' ஏதேனும் நடந்தால், நான் பய'பிராந்தி'யில் 'விஸ்கி விஸ்கி' அழ ஆரம்பித்துவிடுவேன். அப்போது என் மனைவி, 'நான் இருக்க 'ஒய்னா' வருத்தம்' என்று மது 'ரம்'மாகப்பேசி, காய்ச்சிய பீரை ஸாரி, மோரைக் கொடுத்து 'சாராயமாக'... மறுபடி ஸாரி, ஜோராயமாக



# கடன் கிடைக்குமா




## கிரேஸியைக் கேளுங்கள்

என் பயத்தைத் தணிப்பாள், என் உள்ளம் கவர் 'கள்'ளி. தனது calmமா 'சோம பானத்தால்' என் பயத்தை, 'கிக்' செய்துவிடுவாள் என் 'குடி'த்தனக்காரி!

● **என்.பாலகிருஷ்ணன், மதுரை**
***பங்குச் சந்தையில் விளையாடுவதுண்டா...?***

# கிரேஸி?

அந்த விளையாட்டில் மட்டும் நான் 'share'ர மாட்டேன்!

● **எஸ்.விஜயலட்சுமி, திருவில்லிப்புத்தூர்**
***'தாயைப் போல பிள்ளை, நூலைப் போல சேலை' என்கிறார்கள். 'தந்தையைப் போல பிள்ளை' என்று ஏன் சொல்வதில்லை?***

பத்து மாதம் கஷ்டப்பட்டு சுமந்து பெத்துக் காட்டட்டும்... பிறகு தாராளமாகச் சொல்வார்கள் 'தந்தையைப் போல பிள்ளை, வேட்டியைப் போல வெள்ளை' என்று...!

● **வே.ந.கதிர்வேல், வேலூர்**
***கிரேஸி... உங்களிடம் கேள்வி கேட்டால் பதில் கிடைக்கிறது. கடன் கேட்டால்...?***

கிடையாது என்ற பதில் கிடைக்கும். எனக்கு பதில் தெரிந்த கேள்வி கேட்டால், நன்றி-கடன் கிடைக்கும்....

● **ஏ.கே.நாசர், திருப்பட்டினம்**
***எந்த நேரத்தில் மனிதனைத் துன்பம் துரத்த ஆரம்பிக்கிறது..?***

ஓடினால், நாயும் துன்பமும் துரத்தும்... பயப்பட வேண்டாம். துன்பம் ஒரு குரைக்கின்ற நாய். கடிக்காது. நாம் அசையாமல் நின்றால் அது வாலை இன்பமாக அசைக்கும். துரத்தும் துன்பத்தின் தலை எழுத்தான 'து'வை, நாம் தில்லாக ரத்து செய்தால், மிஞ்சுவது 'ன்பம்'!

● **புவனா, கும்பகோணம்**
***எது நட்பு... எது காதல்...?***

இளமையில் கல்... சாதாரண இந்தக் கல்லை, இஸ்திரி போட்டு சலவைக் கல்லாக்குவது நட்பு... அந்த சலவைக் கல் தாஜ்-மஹாலானால், அது காதல்...!



# யாரடி நீ மோகினி!

இவன் காதலிக்கும்போது அவள் காதலிக்காமல், அவள் காதலிக்கும்போது இவன் காதலிக்காத கதை. வேலை கிடைக்காத இளைஞனாய் கும்மியடிக்கும் தனுஷ், காதல் வந்ததும் களேபரப்படுத்துகிறார். அப்பாவை சபிப்பதும் அவருக்காக உருகுவதும் இயல்பின் இன்னொரு பக்கம். பக்கத்து வீட்டுப் பையன் மாதிரி நம்மோடு மிகவும் நெருக்கமாகி விடுகிறார்.

நயன்தாராவுக்கு அப்படியொரு கைதட்டல் தியேட்டரில். அவர் வசீகரித்ததன் காரணம் ரெண்டு ரீல் முடிவதற்குள் புலனாகி விடுகிறது. சத்தியமாய் கவர்ச்சி மட்டும் இல்லை. அதையும் தாண்டி வெளிப்படும் தேர்ந்த முகபாவனைகளும் உணர்வுகளை அவர் வெளிப்படுத்தும் விதமும் ஈர்ப்பதில் ஆச்சரியமில்லை. ஆனால், இந்தப் படத்தில் தனுஷுக்கு அக்கா மாதிரி இருப்பது பலவீனம். ரகுவரன், கனமாக்கி விடுகிறார் இதயத்தை. மகனது உள்மனம் உணர்ந்து தவிக்கும் தந்தையாக நெகிழ வைக்கிறார். தோழனாக வாழ்ந்தவர் மறையும்போது, நம்மையறியாமல் கண் கலங்கி விடுகிறது. நண்பர்களாக வரும் கார்த்திக் பழைய தியாக 'ராஜா'வை ஞாபகப்படுத்துகிறார். கருணாஸ் ஏன் இந்தப் படத்தில்? தனுஷை ஒருதலையாகக் காதலிக்கும் சரண்யாவுக்கு ரசிகர் மன்றம் ஆரம்பிக்கலாம். குட்டி, அத்தனை சுட்டி!

சித்தார்த்தின் ஒளிப்பதிவில் புதுமை இல்லை. யுவன் இசையில் உயிர்ப்பு குறைவு. ஒரு பாடலுக்கு ஆடும் ரகசியாவின் கடைசி நேர மூவ்மெண்ட்ஸ் அபாரம். படத்தின் ஒரே ஃபைட் சீன் பயங்கர திணிப்பு.

வாய்விட்டுச் சிரிக்க வைக்கிறார்கள் என்பதைத் தாண்டி பல விஷயங்களில் படம் பின்தங்கி இருக்கிறது. பழைய குடும்பக் குதூகல கதையில் தொடங்கி பார்த்துப் பார்த்துச் சலித்துப்போன காட்சிகள் சிரிப்பு முடிந்ததும் மறந்துவிடுகின்றன. க்ளைமாக்ஸை நோக்கி இவ்வளவு இழுத்திருக்க வேண்டாம். செல்வராகவன் திரைக்கதை அங்கங்கே 'டல்'லடிக்கிறது. மித்ரன் ஜவஹர் பிழைத்துக்கொள்வார்.

தெலுங்கில் ஹிட்டடித்த கதையாம்! தமிழில் கீர்த்தி உண்டு, நேர்த்தி இல்லை!

– ஆல்ஃபர்டோ




# கல்கி



2008 ஏப்ரல் 20
ஸர்வதாரி சித்திரை 8
மலர் : 66
இதழ் : 38


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## திபெத் அகதிகளின் தீரம்!

உலகெங்கிலும் உள்ள திபெத்திய அகதிகள், தங்கள் நாட்டை சீனா ஆக்கிரமித்திருப்பதையும், அங்கு அது இழைக்கும் கொடுமைகளையும் எதிர்த்துக் குரல் கொடுக்க, இந்த நேரத்தில் ஒன்று திரண்டிருப்பது வெகு சாமர்த்தியமான செயல். திபெத்தியர்கள், சீனாவில் ஒலிம்பிக் நடப்பதை ஆட்சேபிப்பதன் மூலம் ஒலிம்பிக் பந்தயங்களை எதிர்க்கவில்லை; சீன அராஜகத்தைத்தான் எதிர்க்கிறார்கள் என்பதை உலகம் நன்றாகவே புரிந்துகொண்டிருக்கிறது. சீனாதான் இந்த விஷயத்தைப் புரிந்து கொண்டாலும் புரியாத மாதிரி நடிக்கிறது. திபெத்தியர்களின் தார்மிக எதிர்ப்புக்கு வன்முறைச் சாயம் பூசி, அவர்களை வில்லன்களாகச் சித்திரிக்க முயன்று வருகிறது.

இந்தியாவில் திபெத்தியர்கள் நடத்திய அமைதியான போராட்டங்களைச் சகியாமல், பீய்ஜிங்கில் உள்ள இந்தியத் தூதரை நள்ளிரவில் அழைத்து, ஆட்சேபணை தெரிவித்திருக்கிறது சீன அரசு! நள்ளிரவில் தூதரை (அதிலும் ஒரு பெண்ணை) எழுப்பி, புகார் படிக்கும் அளவுக்கு இங்கே சட்டம் ஒழுங்கு கெட்டுவிடவில்லை! புது டெல்லியில் உள்ள சீன தூதரகத்துக்குள் நுழைந்து, எதிர்ப்பு வாசகங்களை முழங்கிய திபெத்திய அகதிகளினால் சீன வல்லரசு கவிழ்ந்துவிடப்போவதுமில்லை!

சீனாவின் இந்த 'மிரட்டல்' போக்கை இந்திய அரசாங்கம் எதிர்க்கவுமில்லை; ஆட்சேபிக்கவுமில்லை. பதிலுக்கு, இங்கேயுள்ள சீனத் தூதரை அழைத்துக்கூட விஷயங்களைத் தெளிவுபடுத்தி எச்சரிக்கவில்லை. இவ்விஷயத்தில் சீனாவிடம் மாறுபாடு






தெரிவிக்க இத்தனை தயக்கம் தேவையேயில்லை.

சீனாவில் நடப்பது, வடிகட்டிய சர்வாதிகார ஆட்சி என்பது உலகறிந்த உண்மை. அண்டை நாடுகளின் நிலப்பரப்பை சீனா அவ்வப்போது சிறிது சிறிதாக கபளீகரம் செய்து வருகிறது. இந்தியாவின் 14,000 சதுர மைல் பரப்பை ஆக்கிரமித்துள்ளது. அருணாசலப் பிரதேசத்துக்குச் சொந்தம் கொண்டாடுகிறது! திபெத்தை ஆக்கிரமித்து ஒடுக்கி ஆள சீனா முயன்று வருவதும் எல்லோருக்கும் தெரியும்.

சீனாவைப் பொருளாதார ரீதியாகச் சார்ந்திருப்பதால் பெரும்பாலான உலக நாடுகள் அதன் அநியாய செயல்பாடுகளை எதிர்த்துக் குரல் கொடுக்க அஞ்சுகின்றன.

சீனாவோ, திபெத்திய மதகுரு தலாய் லாமாதான் உலகெங்கும் உள்ள திபெத் அகதிகளைத் தூண்டுவதாகக் குற்றம்சாட்டி, தலாய் லாமாவுக்கு அடைக்கலம் கொடுத்துள்ள இந்தியாவையும் கண்டிக்கிறது!

சீனா கண்டித்தாலும் சரி, தண்டித்தாலும் சரி; இதர நாடுகள் ஆதரித்தாலும் சரி, அச்சத்தினால் ஆதரிக்காது போனாலும் சரி, திபெத்தியர்கள் தங்கள் நாடு சுதந்திரம் அடையும்வரை போராடுவதை நிறுத்தமாட்டார்கள். திபெத்தின் கலாசார வேர்கள் ஆழ மானவை; ஆன்மிக வேர்கள் பலமானவை. இது போன்றதொரு தேசத்தால், சமுதாயத்தை முகமற்ற சுவர்போல் பாவிக்கும் சீனாவுக்குக் கட்டுப்பட்டு இருக்கவே முடியாது. சிதறிக் கிடக்கும் திபெத்திய அகதிகளைப் பெரிய அளவில் ஒருங்கிணைத்து, திட்டம் தீட்டி, யாரும் எதிர்ப்பு இயக்கத்தை நெறிப்படுத்திக் கொண்டிருக்கவில்லை. அத்தனை அகதி களும் தன்னிச்சையாகத்தான் ஒலிம்பிக் ஜோதியை பகிஷ்கரிக்க பொங்கி எழுந்திருக்கிறார் கள். உயிர், உடைமைகளுக்கு அஞ்சாமல், சிறைவாசத்துக்கும் இதர தண்டனைகளுக்கும் துணிந்து, நியாயமான விடுதலை வேட்கையை, வன்முறையின்றி வெளிப்படுத்தும் திபெத்தியர்களுக்கு, ஆதரவுக் குரல் கொடுக்க உலக நாடுகள் ஒன்று சேர வேண்டும். அவற்றுள் ஒரு சில நாடுகளேனும் ஒலிம்பிக்கில் பங்கேற்காமல் பகிஷ்கரித்தால், சீனாவுக்கு எச்சரிக்கையாக அமையும்; திபெத்தியர்களுக்கு மட்டுமின்றி, மனித மாண்புக்கும் மானுடத்தின் சுதந்திர வேட்கைக்கும் கிடைத்த வெற்றியாகவும் அமையும். ●



# தினம் ஒரு கலர்

உடையழகு ஆண்களுக்கும் மிக முக்கியம். 'இன்றைக்கு ஒரு நேர்முகத் தேர்வில் வெற்றி பெற வேண்டுமானால் சான்றிதழ்கள் மாத்திரமல்ல, பொருத்தமான கச்சிதமான உடையணிந்தால்தான், அப்பாயின்ட்மென்ட் கியாரண்டி' என ஃபேஷன் டிசைனர்கள் சத்தியம் செய்கின்றனர். இதோ அவர்கள் தரும் ஆடை பாதி அட்வைஸ் :

● எந்த பான்ட்-ஷர்ட்டாக இருந்தாலும் கரெக்டான அளவில் இருப்பது அவசியம். 'வளர்ற புள்ளதானே, பெரிசா இருக்கோணும்' என தஸ்புஸ் வானமே எல்லை ஸ்டைல் எல்லாம் நகைப்புக்குரியது. கேர்ள்ஸ் முகம்கூடத் திருப்பமாட்டார்கள். பாஸோ, பார்த்தாலே இரிடேட் ஆயிடுவார்.

● 'என் வொய்ஃப்தான் எனக்கு ஷாப்பிங் பண்ணுவா, அவ எடுத்துக் கொடுக்கிறதைப் போட்டுண்டு ஆஃபிஸ் போயிடுவேன்' என்று பெருமையடிச்ச காலம் ஹிஸ்டரி புக்ஸுக்குள்ளே பதுங்கிடுச்சு. இது எனக்கு நானே யுகம்!

● பிஸினஸ் மீட்டிங் மற்றும் நேர்முகத் தேர்வுக்கு ஃபார்மலான முழுக்கை சட்டைதான் அணிய வேண்டும். ஹாஃப் ஷர்ட் என்பது காஷுவல் ட்ரஸ்ஸிங்!

● க்ளீன் ஷேவ் பண்ணிய முகம் நிச்சயமாக பளிச் ஸ்டைல்.

● முகத்திற்கேற்றவாறு ஹேர் ஸ்டைல் இருக்க வேண்டும்.

● சத்தம் போடாத காலணிகள் அவசியம்!

● நல்ல பர்ஃப்யூம் நிச்சயம் தேவை.

● விதவிதமான கலர்களில் ஷர்ட்ஸ் உங்கள் வார்ட்ரோபில் இடம் பிடிக்க வேண்டும்.

● ஒரு மாதிரி நெர்வஸாக, தொய்ந்து விழும் ஆண்கள், ஸ்டைல் மன்னர்களல்ல. எப்போதுமே சிரித்த முகமாக, 'ஃபீல் குட்' கலாசாரத்தைப் பழகிப் பின் பற்றினால் சுமாரான டிரெஸ் கூட பார்க்கிறவங்களுக்கு சூப்பராகத் தோன்றும்!



- லதா சேகர்



# "மோடி ஒரு

## குஜராத் எதிர்க்கட்சித்






* சக்திசிங் ஹரிசந்திரசிங் கோஹில்



குஜராத்தில், முதல்வர் நரேந்திர மோடி தலைமையிலான ஆட்சியையும், நிர்வாகத்தையும் பற்றி பிரதான எதிர்க்கட்சியான காங்கிரஸ் என்ன நினைக்கிறது? அறிந்துகொள்ள குஜராத் சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர் சக்திசிங் ஹரிசந்திரசிங் கோஹிலைச் சந்தித்தோம்.

**நரேந்திர மோடி மீண்டும் முதலமைச்சராகியிருப்பதற்கு என்ன காரணம்?**

''மதக்கலவரம் இன்னும் ஆறவில்லை. மத உணர்வுகளைத் தூண்டி மக்களைப் பிளவுபடுத்தி மீண்டும் முதலமைச்சராகி இருக்கிறார் மோடி.''

**காங்கிரஸ் கட்சி மோசமான தோல்வியினைச் சந்தித்துள்ளதே..?**

''நாங்கள் மக்களின் நாடியைச் சரியானபடி கணிக்கவில்லையோ என்று நினைக்கிறேன்.''

**மோடியின் ஆட்சியின் கீழ் குஜராத் அபாரமான வளர்ச்சி அடைந்துள்ளதே..?**

''அதை நான் ஒப்புக்கொள்ளவே மாட்டேன். மோடி, ஒரு சிறந்த மார்க்கெட்டிங் நிபுணர். எனவே, தமது பணிகளைச் சிறந்த முறையில், மக்கள் மத்தியில் வியாபாரம் செய்து, ஓட்டுகளைப் பெற்று வெற்றி அடைந்துவிட்டார். ஆனால், குஜராத்தின் உண்மையான நிலை அவர் சொல்வது போல சிறப்பாக இல்லை. குஜராத்தியர்கள் எப்போதுமே கடுமையாக உழைக்கத் தயங்காதவர்கள்; வியாபாரத்தில் சிறந்தவர்கள். மோடி, முதலமைச்சராவதற்கு முன்னரே குஜராத், நாட்டின் முதல்தர மாநிலமாகத்தான் இருந்தது. சொல்லப்போனால், இப்போது தரவரிசைப் பட்டியலில் சற்றுக் கீழே இறங்கி இருக்கிறது. குஜராத்திகள், பங்குச் சந்தையில் முதலீடு செய்வதில் வல்லவர்கள். அண்மையில் பங்குச் சந்தை அபாரமான எழுச்சி கண்டபோது, அதற்கும் தாமே காரணம் என்று பெருமை பட்டுக்கொண்டார் மோடி.''

# சர்வாதிகாரி!"

## குஜராத் டுடே *Exclusive*



### தலைவர் விளாசல்

**மோடிக்கு இணையாகச் சொல்லும்படி காங்கிரஸ் கட்சியில் குஜராத்தில் தலைவர்கள் இல்லை என்பது பெரியதொரு குறைதானே?**

''மோடி ஒரு தலைவரே இல்லை. அவர் ஒரு சர்வாதிகாரி. அவரைப் போன்ற சர்வாதிகாரத் தலைவர்கள் காங்கிரஸ் கட்சியில் இல்லாமல் இருப்பதுதான் நல்லது.''

**2002 கலவரத்துக்குப் பிறகு, குஜராத் மக்கள் மத்தியில் மதச் சார்பின்மை குறித்த கருத்து மாற்றமடைந்திருப்பதாக நினைக்கிறீர்களா?**

''மதக் கலவரங்கள் என்பது குஜராத்துக்குப் புதிதல்ல. ஆனால், 2002 கலவரத்துக்குப் பிறகு, மதத்தின் அடிப்படையில் குஜராத் மக்கள் பிரிந்து நிற்கிறார்கள். மோடி ஒரு குறிப்பிட்ட சமூகத்தினருக்கு எதிராக இருப்பவர்களுக்கு அடைக்கலம் அளித்துப் பாதுகாக்கிறார்.''

**மோடியின் அரசாங்கத்தில் லஞ்ச ஊழல் இல்லை என்று மக்களே ஒப்புக் கொள்கிறார்கள்...**

''இதுவும் ஒரு பொய்ப் பிரசாரம்தான்.

**குஜராத்தைப் பொறுத்தவரை காங்கிரஸ் கட்சியின் எதிர்காலம்?**

''பிரகாசமாக இருக்கிறது. பாராளுமன்றத் தேர்தல் அதை நிரூபிக்கும்.''

**சோனியா காந்தி, மரண வியாபாரி என்று மோடியை விமர்சனம் செய்தது, காங்கிரஸ் கட்சியின் வெற்றி வாய்ப்புகளைக் கெடுத்து விட்டதே?**

''இல்லவே இல்லை. சோனியாஜியின் பிரசாரம் காங்கிரஸ் கட்சியின் வெற்றிக்குப் பெரிய அளவில் உதவியது.''

குஜராத் பற்றி தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் கிருஷ்ணசாமி என்ன நினைக்கிறார் :

உண்மையில் சொல்லப்போனால்,






நன்றி







குஜராத் மட்டுமல்ல... இந்தியாவின் எந்த மாநிலத்தை எடுத்துக்கொண்டாலும், அங்கே ஏதாவது வளர்ச்சித் திட்டங்கள் நடக்கிறது என்றால் அதற்குக் காரணம் மத்திய அரசுதான்.

அந்த நிதியுதவியைக் கொண்டு செயல்படுத்தப்படும் திட்டங்களை, தமது திட்டங்கள் என்று முலாம் பூசி மோசடி செய்கிறார் மோடி.

மற்றொரு பக்கத்தில் பார்த்தால், சட்டம்-ஒழுங்கு சந்திச் சிரிக்கிறது. குஜராத்தில் ஆங்காங்கே குறுநில மன்னர்கள் போல ரவுடிகள் ராஜ்யம் நடத்தி வருகிறார்கள். காந்தி பிறந்த மண்ணில் கள்ளச் சாராயம் பெருக்கெடுத்து ஓடுகிறது. இதன் மூலம் உள்ளூர் ஆளும் கட்சியினர் கோடீஸ்வரர்களாக மாறி வருகிறார்கள்.

'மோடி இந்தியப் பிரதமராக வேண்டும்' என்று விபரீத ஆசைகளைச் சொல்கிறார்கள். இந்தியாவின் ஒற்றுமையைக் கட்டிக் காப்பதால் என்றைக்கும் முன்னணியில் இருக்கும், காங்கிரஸ் பேரியக்கம் இதுபோன்ற துரதிர்ஷ்டவசமான நிலை ஏற்பட ஒருபோதும் இடம் கொடுக்காது.

# அடுத்த பிரதமர் நானா?

## மனம் திறக்கும் மோடி

இந்தியாவின் மாநில முதலமை[illegible]ர்களில், தம்முடைய செயல்பாடுகளுக்காக அதிகமான அளவுக்குப் பாராட்டுகளுக்கும், விமர்சனத்துக்கும் உள்ளான நரேந்திர மோடி பொதுவாக பத்திரிகைகளுக்குப் பேசாதவர். கல்கிக்கெனப் பிரத்யேகப் பேட்டியளித்தார். 'குஜராத் டுடே' யின் சிகரமாக இதோ அவர் பேட்டியிலிருந்து...

முதல் முறையாக குஜராத் முதல்வரானபோது உங்கள் கனவு என்னவாக இருந்தது?

# குஜராத் டுடே
*Exclusive*



''1995ஆம் ஆண்டுக்குப் பிறகு நான் குஜராத்திலேயே இல்லை. எதிர் பாராதவிதமாகவே முதலமைச்சர் பொறுப் பேற்றுக் கொண்டேன். அப்போது பூகம்பத் தின் தாக்குதலால், குஜராத் நிலை குலைந்து போயிருந்தது. மக்கள் மனத்தில் மீண்டும் ஒரு நம்பிக்கையை ஏற்படுத்தவேண்டும் என்பதே என் தலையாய கடமையாக இருந்தது. அதனைத் தொடர்ந்து, இரண்டு விஷயங்களில் கவனம் செலுத்த வேண்டியிருந்தது. ஒன்று குஜராத்தைச் செழிப்பான ஒரு மாநிலமாக்க வேண்டும். இரண்டாவது, அந்தச் செல்வம், அனைத்துத் தரப்பினருக்கும் பரவலாக அளிக் கப்பட வேண்டும். அதற்காகச் சரியான முறை யில், தீர்க்கதரிசனத்துடன் திட்டங்களை உருவாக்க வேண்டி இருந்தது.''

* சபர்மதி ஆறு...




**உங்கள் கனவினை நனவாக்க என்னென்ன சவால்களை எதிர்கொண்டீர்கள்...?**

''நான் பதவிக்குப் புதியவன் என்பதால்,- முதலமைச்சராகப் பதவி ஏற்றுக்கொண்டு, முதல்முறையாகத் தலைமைச் செயலகத்துக்கு வந்தபோதுதான், ஒரு மாநில முதலமைச்சரது அறை எப்படி இருக்கும் என்றே தெரிந்து கொண்டேன். அரசாங்கத்தின் நடைமுறை எப்படி இருக்கும் என்பதும் எனக்குத் தெரி யாது. அரசாங்கக் கோப்புகளை எப்படிப் படிக்க வேண்டும்? என்றெல்லாம் என் னுடைய பிரதம செயலாளர்தான் சொல்லிக் கொடுத்தார். எனவே, அரசு அதிகாரிகள் எல்லாரும் நான் எப்படிப்பட்டவன்? நான் என்ன செய்யப் போகிறேன்? என்று கூர்ந்து கவனிக்கலானார்கள்.

அரசாங்கத்தின் அதிகாரம், நிதி நிலைமை போன்றவற்றைத் தெரிந்துகொண்டேன். ஆனால், மக்களின் தேவை என்ன என்பது எனக்கு எப்போதுமே நன்றாகத் தெரியும். அரசாங்கத்தின் மனித வளமாகட்டும், அதன் இயந்திரங்களாகட்டும், திறமையை முழுமை யாகப் பயன்படுத்தி, மக்கள் பயன்பெறுவதற்கு உரிய நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பது எனது லட்சியமாக இருந்தது.''

* எதிர்பாராத முதல்வர் பொறுப்பு



**சிரஞ்சீவி, கன்யா கேல்வாணி, ஜோதி கிராம் போன்ற திட்டங்களைச் செயல்படுத் தும் எண்ணம் எப்படி வந்தது?**

''நான் முதல்முறை முதலமைச்ச








* சிரஞ்சீவித் திட்டம்



ராகப் பொறுப்பேற்றவுடன், பல்வேறு துறைகளின் செயலாளர்களையும் சந்தித்தேன். அந்தக் கூட்டத்தில், கல்வித் துறை செயலாளர், ''நாட்டிலேயே, குஜராத்தில் தான் பெண் குழந்தைகள் கல்வி மிகவும் பின் தங்கிய நிலையில் இருக்கிறது என்று கூறினார். அது எனக்கு அதிர்ச்சியை அளித்தது. அதிர்ச்சியின் விளைவே கன்யா கேல்வானி திட்டம். நான் கலந்துகொள்ளும் நிகழ்ச்சிகளில், எனக்கு அளிக்கப்படும் அனைத்துப் பரிசுப் பொருட்களும் ஏலம் விடப்பட்டு, அதன் மூலமாகக் கிடைக்கும் பணம், பெண் குழந்தைகள் கல்வித் திட்டத்துக்காகப் பயன் படுத்தப்படுகிறது. இதுவரை, அப்படிக் கிடைத்துள்ள தொகை மட்டும் பதினான்கு கோடி ரூபாய்.

'இரவு சாப்பிடுகிற நேரத்தில்கூட மின்சாரமில்லையே!' என்று வருத்தப்பட்டார்கள். அவர்கள் பிரச்னைக்கு என்ன தீர்வு என்று யோசித்தபோது, பிறந்ததுதான் ஜோதிகிராம் திட்டம். இன்று மாநிலத்தின் அனைத்துக் கிராமங்களிலும், வீடுகளுக்குத் தடையின்றி 24 மணி நேரமும் மின்சாரம் கிடைக்கிறது.

அதேபோல, ஏழைமை மற்றும் மருத்துவ வசதி இல்லாத காரணத்தால், பிரவசத்தின்போது கிராமத்தில் இருக்கும் கர்ப்பிணிப் பெண்களும், அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளும் மரணமடைவது அதிகமாகவே இருந்தது. அவர்களை அருகிலுள்ள தனியார் மருத்துவமனைகளுக்கு வரவழைத்து, இலவசமாகப் பிரசவம் பார்த்துக்கொள்ள அரசாங்கம் செயல்படுத்தும் திட்டம்தான் சிரஞ்சீவி. இந்தத் திட்டங்களால் கிராம மக்கள் நேரடியாகப் பயன்பெறுவதை மாநிலத்தின் எந்தக் கிராமத்துக்குச் சென்றாலும் பார்க்கமுடியும்.''

**நர்மதா அணை பிரச்னையில், மத்தியப் பிரதேசத்தில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணம் வழங்குவதில் இன்னும் இழுபறி இருக்க... குஜராத்தில் மட்டும் எப்படி இத்தனை வேகமாகப் பணிகள் நடக்கின்றன?**

''நான் ஒரு பொறுப்பை ஏற்றுக்கொண்டால், அதைச் செம்மையாகச் செய்து முடிக்கும் வரை ஓயாமல் உழைக்கும் மரபில் வந்தவன். ஒரு சங்கிலித் தொடர்போல, அரசாங்கத்தின் அத்தனை அங்கங்களி

ஓரம் இந்த உணர்வு தொடர ஆரம்பித்திருக்கிறது. குஜராத் மக்களுக்கு, பெரிதும் பயனளிக்கும் நர்மதா திட்டத்தை, எவ்வளவு சீக்கிரம் முடித்து முழு பலன் கிடைக்கச் செய்ய முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் முடிக்க வேண்டும் என்பது அரசின் துடிப்பாக இருக்கிறது. மேலும் அரசாங்கத்தோடு மக்களும் இந்தத் திட்டத்தில் கைகோத்துச் செயல்பட்டுப் பொறுப்புகளை ஏற்றுக் கொண்டிருக்கின்றனர்.''

**ஆனாலும், அணையின் மேற்பகுதியில் மதகுகள் அமைப்பது தாமதமாகிக் கொண்டிருக்கிறதே?**

## மதச் சார்பின்மை என்பது நல்ல ஆட்சியும் மக்கள் நலனும்தான்.

''மத்திய அரசின் அனுமதிக்காகக் காத்திருக்கிறோம்.''

**மத்திய அரசு வேண்டுமென்றே தாமதம் செய்வதாக நினைக்கிறீர்களா?**

''நான், இந்த விஷயத்தில் யாரையும் குறை சொல்ல விரும்பவில்லை.''

**குஜராத் தேர்தலின்போது, நீங்கள் எழுப்பிய 'ஜிதேகா குஜராத்' (குஜராத்தின் வெற்றி) என்ற கோஷத்தின் பின்னணி என்ன?**

''ஜிதேகா குஜராத் என்பது, தேர்தலுக்காக உருவாக்கப்பட்ட கோஷம் அல்ல. சுதந்திரத்துக்கு முன்பு, 'வந்தே மாதரம்' என்ற கோஷம், நம் நாட்டு மக்கள் அனைவரையும் ஒன்று திரட்டியது. எனவே, அப்படி உந்து சக்தி ஒர் இயக்கத்துக்கு அவசியம் என நினைத்து, 'ஜிதேகா குஜராத் என்ற கோஷம் உருவானது. அண்மையில், குஜராத்துக்கு அகில இந்திய விளையாட்டுப் போட்டிகளில் பரிசுகள் கிடைத்தபோதுகூட, 'ஜிதேகா குஜராத்!' என்றுதான் குறிப்பிட்டேன்.''

**குஜராத்தில் பல்துறை வளர்ச்சி**



குஜராத் டுடே *Exclusive*















**காணப்பட்டாலும் விளையாட்டுத் துறையில் போதிய அளவு வளர்ச்சி இல்லையே?**

''சில ஆண்டுகளுக்கு முன்பு வரை, அகில இந்திய அளவில் விளையாட்டுப் போட்டிகளில் குஜராத் சாதனை படைக்கவில்லை. ஆனால், கடந்த மூன்றாண்டுகளில் குஜராத் வென்றிருக்கும் தங்கமெடல்களின் எண்ணிக்கை, முந்தைய ஐம்பது வருடங்களில் ஜெயித்ததைவிட அதிகம். இதற்கென பிரத்யேகத் திட்டங்கள் தீட்டப்பட்டிருக்கின்றன. அதன் பலனை முழுமையாகக் காண்பதற்கு இன்னும் சில ஆண்டுகளாகும்.''

**இந்தியா முழுக்க, இலவசங்கள் வழங்குவது பிரபலமாகி இருக்க, குஜராத் தேர்தலின்போது, 'இலவசம் ஏதும் கிடையாது. வரி, கடன் பாக்கி இருப்பவர்களுக்கு நோட்டீஸ் கொடுப்பேன்' என்று சொல்லியிருந்தீர்களே?**

''மக்கள், எதையும் இலவசமாகக் கேட்கவில்லை. அவர்கள் கேட்பது நல்ல ஆட்சி; நல்ல சேவைதான். அதற்குரிய கட்டணத்தைச் செலுத்த அவர்கள் தயாராக இருக்கிறார்கள். ஏழைகள்கூட எதையாவது கொடுத்தால், இலவசமாக வாங்கிக் கொள்வது கிடையாது. தம்மால் முடிந்த சிறு தொகையைத் தருவது தான் இந்த மண்ணின் மரபு.''

**உங்களை ஒரு சிலர் சர்வாதிகாரி என்று குற்றம் சாட்டுகிறார்களே?**

''எதற்காக என்னை இப்படிச் சொல்கிறார்கள் என்று எனக்குத் தெரியாது. விமர்சனம் செய்ய அவர்களுக்கு உரிமை உண்டு. ஆனால், அவர்களுக்குப் பதில் சொல்லுவதன் மூலம் எனது சக்தியை விரயம் செய்ய எனக்கு விருப்பமில்லை. மற்றவர்கள், இலவசங்களை வழங்கி அதிகாரத்தைக் கைப்பற்ற நினைக்கிறார்கள். நான், அதிகாரத்தில் இருக்கிறேனா, இல்லையா என்பதைப் பற்றிக் கவலைப்படாமல், அதிகாரம் மக்கள் கையில் இருக்கப் பாடுபட்டுக் கொண்டிருக்கிறேன்.''

**பூகம்பப் பாதிப்பிலிருந்து மிகக் குறுகிய காலத்திலேயே குஜராத்தை எப்படி மீட்க முடிந்தது?**

''பூகம்பத்தால் குஜராத்தின் பதிமூன்று மாவட்டங்களில், ஆறாயிரம் கிரா

மங்கள் கடுமையாகப் பாதிக்கப்பட்டன. பல்முனை பாதிப்புகளிலிருந்து மீள்வது அத்தனை சுலபமில்லை என்பது புரிந்தது. ஆனாலும், முற்றிலுமாக மீள உரிய நடவடிக்கை எடுக்காவிட் டால், குஜராத் வேறு எந்தவகையில் முன்னேற்றம் கண்டாலும், பலன் இல்லை என்று உணர்ந்தேன். அதற்கான நடவடிக்கைகளில் மாநிலமே முழு மூச்சாய் இறங்கியது. கோடிக்கணக்கான நிதி உதவியை ஒதுக்கினோம். மக்களை வங்கிகளில் கணக்கு ஆரம்பிக்கச் சொல்லி, நேரடியாக அவர்களின் வங்கிக் கணக்கிலேயே பணத்தை வழங்கி, இடைத்தரகர்களையும், ஊழலையும் இல்லாமல் செய்தோம். நாட்டிலேயே முதல் முறையாகப் பேரழிவு நிர்வாக ஆணையம் அமைக்கப்பட்டது குஜராத்தில்தான்.''

**'மலம் அள்ளினால் சொர்கத்துக்குப் போகலாம்' என்பதாக நீங்கள் பேசியது தமிழ்நாடுவரை சலசலப்பை ஏற்படுத்தியதே. ஏன் அப்படிப் பேசினீர்கள்?**

''இது மிகவும் அபத்தமானது. நான் அப்படிப் பேசவேயில்லை. குஜராத்தில் ஏழு மாநகராட்சிகள் உள்ளன. அவற்றில் ஜாம்நகர், பரோடா ஆகிய இரு மாநகராட்சிகளிலும் மேயராக இருக்கும் என் கட்சியைச் சேர்ந்தவர்கள், அந்த இனத்தைச் சேர்ந்தவர்கள். அப்படி இருக்கும்போது, நான் இப்படிப் பேசுவேனா?''

**சென்னையில் அ.தி.மு.க. தலைவி ஜெயலலிதாவைச் சந்தித்தபோது என்ன பேசினீர்கள்?**

''நான் சொல்ல வேண்டியதை, கட்சித் தலைமையிடம் சொல்லிவிட்டேன். அதற்கு மேல் அது பற்றி நான் எதுவும் சொல்ல விரும்பவில்லை.''

**உங்களை, 'பிரதமர் பதவிக்குரிய எதிர்கால வேட்பாளர்' என்று குறிப்பிடுகிறார்கள். தேசிய அரசியலில் ஆர்வம் உண்டா?**

''ஒவ்வொரு மாநில முதலமைச்சருமே, தேசிய அரசியலின் அங்கம்தான்.''

**குஜராத்தில், பூரண மது விலக்கை அமல்படுத்துவதில் நீங்கள் எத்தகைய சவால்களைச் சந்திக்க வேண்டி இருக்கிறது?**

''அரசாங்கத்துக்கு எந்த விஷயத்















நன்றி



தைச் செயல்படுத்த வேண்டுமென்றாலும், ஏதாவது கஷ்டங்கள் இருந்துதான் தீரும். மது விலக்கைப் பொறுத்தவரை, மக்களுக்கு அறிவூட்ட வேண்டும். அரசியலுக்கு அப்பாற்பட்டு சமூக - சமயத் தலைவர்கள் இந்த விஷயத்தில் சிறப்பான முறையில் பங்காற்ற முடியும்.''

2002 கலவரத்தின் வடு இன்னும் மாறவில்லை. மாநிலத்தின் முதலமைச்சர் என்ற முறையில், பாதிக்கப்பட்ட மக்களின் மனத்தில் உள்ள பயத்தைப் போக்க வேண்டியது உங்கள் கடமை அல்லவா?

''இதுபோன்ற விஷயங்கள் இப்போது

## ஃப்ரீ' போஸ்டுக்கு சி.டி. பரிசு!

விரைந்து வரும்
'குஜராத் டுடே'
பற்றிய முதல் இரண்டு
விமர்சனங்களுக்கு, துக்ளக் ஆண்டு
விழாவில் மோடி ஆற்றிய உரையின்
சி.டி. பரிசு!

சென்ற வார குஜராத் டுடே
குறித்த விமர்சனங்களுக்கு சி.டி. பரிசு
பெறுவோர் :

**ஆர். பிரகாஷ், பொன்மலை**
**கௌசல்யா ராகவன், சென்னை**



சுப்ரீம் கோர்ட்டில் இருக்கின்றன. தீர்ப்பு வரட்டும்.''

**குஜராத்திலும், அகில இந்திய அளவிலும், காங்கிரஸ் கட்சியின் எதிர்காலம் குறித்து என்ன நினைக்கிறீர்கள்?**

''நான் ஜோதிடர் அல்ல.''

**இந்தியாவின் பல பகுதிகளிலும் குடும்ப வாரிசு அரசியல் போற்றி வளர்க்கப்படும் சூழ்நிலையில், நீங்கள் உங்கள் குடும்பத்தினரை ஒதுக்கி வைத்துவிட்டு, தனி மனிதராக வாழ்கிறீர்களே?**

''நீங்கள் சொல்வது தவறு. நானும் எனது குடும்பத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கிறேன். எனது குடும்பம் மிகமிகப் பெரியது, அதில் குஜராத்தின் ஐந்தரை கோடி மக்களும் இருக்கிறார்கள்.''

**வாரிசு அரசியல் பற்றி உங்கள் கருத்து தான் என்ன?**

''நான் கருத்து தெரிவிக்க விரும்பவில்லை.''

**ஆர்.எஸ்.எஸ். பிரசாரகர்... குஜராத் முதல்வர்... எது மகிழ்ச்சி?**

''மகிழ்ச்சிக்கும் நான் ஏற்றிருக்கும் பொறுப்புக்கும் சம்பந்தமில்லை. எங்கே, எப்போது, எந்தப் பணியில் இருந்தாலும், மக்களுக்குப் பணியாற்ற என்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறேன்.''

**மதச்சார்பின்மை என்பதற்கு உங்களது விளக்கம் என்ன?**

''நம் நாட்டில் இன்றைக்கு மிகவும் தவறாகப் பயன்படுத்தப்படும் வார்த்தை மதச்சார்பின்மை. சிலருக்கு மதச்சார்பின்மை என்பதற்குப் பொருள் ஓட்டு வங்கி. இன்னும் சிலருக்கு மதச்சார்பின்மை என்பது, அகில உலக அளவில் விருதுகளும், நிதி உதவிகளும் பெறும் வழி. இதுபோன்ற மதச்சார்பின்மையை ஆதரிக்கமாட்டேன். என்னைப் பொறுத்தவரை மதச்சார்பின்மை என்றால் நல்லாட்சி; மக்களின் நலன்!''

**(பயணம் முடிந்தது)**

*குஜராத் பயணம், பார்வை, படைப்பு :*

**ப்ரியன்,**

**எஸ்.சந்திரமௌலி**









# பட்டுப் புடைவை பரிசுத் திட்டம்!

## ஆறு வார அதிரடி!

'குஜராத் டுடே' பக்கங்களில் அடங்கியுள்ள ஒரு முக்கியமான சிறப்பைக் கண்டு பிடித்து எழுத, அருகிலுள்ள கட்டங்களை நிரப்புங்கள். வட்டமிட்ட எழுத்துகளை வரிசைப்படுத்தி, கடைசி கட்டங்களை நிரப்புங்கள். கூப்பனையும் நிரப்பி, **'ஆறு வார அதிரடி – 6' கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை – 600 032 என்ற முகவரிக்கு 23.4.08க்கு முன்னதாகக் கிடைக்கும்படி அனுப்புங்கள்.** சரியான விடையை எழுதும் ஒரு வாசகருக்கு, **பாலம் சில்க்ஸ் வழங்கும் பட்டுப் புடைவை பரிசு!** ஒன்றுக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியாக எழுதினால், குலுக்கல் முறைதான்! ஆசிரியர் தீர்ப்பே இறுதி!

பட்டுப் புடைவை பரிசுப் போட்டி
3 மற்றும் 4ல் பரிசு பெற்றோர் முறையே:
**எஸ்.சாந்தி, மதுரை**
**எஸ்.ஆர்.ஜானகி, சென்னை**

'ஆறு வார அதிரடி – 6'

பெயர் : ....................................................

வயது : ..............

முகவரி: ....................................................

....................................................

....................................................

....................................................

கல்கியில் விரும்புவது : ......................

....................................................

1. கர்ப்பிணிகளுக்காக மோடி செயல்படுத்தியது...

2. 'நானும் எனது ... முக்கியத்துவம் கொடுக்கிறேன்'

3. இதனால் குஜராத்தின் பதிமூன்று மாவட்டங்களில் கடுமையான பாதிப்பு.

4. மோடியை சோனியா செய்த விமர்சனம்

5. 'மக்கள் எதையும் ........ கேட்பதில்லை'

6. 'மோடி ஒரு சிறந்த ........ நிபுணர்'

7. மோடி எழுப்பிய கோஷம்...

8. குஜராத் சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவரின் பெயரில் ஒரு பகுதி

**குஜராத்தின் தனிச் சிறப்பு**

# கல்கி -பாலம் சில்க்ஸ் வழங்கும் போட்டி-6



# குருகுலம்!



'சர்க்காவில் நூற்க வேண்டும்; கைக்குத்தல் அரிசியைத்தான் சாப்பிட வேண்டும்' என்றால், எல்லோராலும் அதைப் பின்பற்ற முடியவில்லை. ஆனாலும், இரண்டொருவர் இப்படி இருக்கத்தான் இருக்கிறார்கள். 'நான் கதர்தான் உடுத்திக் கொள்வது', 'நான் கைக்குத்தல் அரிசிதான் சாப்பிடுவது' என்று சொல்கிறவர்களைப் பார்க்கிறோம். இதெல்லாம் பெருமைக்கு அடையாளங்களாக உள்ளன. அதுபோலவே 'குருகுலப் படிப்புத்தான் வேண்டும்' என்று சொன்னால், அது இந்தக் காலத்தில் சிரமம்தான். இம்முறையைப் பூரணமாகக் கொண்டுவர முடியும் என்ற நம்பிக்கையில் நான் சொல்லவில்லை. அப்படி வந்துவிட்டால் நல்லதுதான். ஆனாலும் அது சாத்தியம் என்று தோன்றவில்லை. இருந்தாலும்கூட, இதுமாதிரியான ஒரு முறை இந்த நாட்டில் இருக்கிறது என்பதே தெரியாமல் அடியோடு அழிந்துபோக விடவேண்டாமே என்கிறேன். மியூஸியத்தில் வைக்கிற மாதிரியாவது 'நான் குருகுலவாசம் செய்து படித்தேன்' என்று, வருங்காலத்தில் சொல்லிக் கொள்வதற்காகவாவது சில பேர்கள் பழைய முறையில் படிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். விதை முதலையாவது ரக்ஷிக்க வேண்டும். ஏனென்றால், குருகுல வாசத்தில் ஏற்படுகிற குருபக்திதான் இன்றைய மாணவர்களின் கோளாறைத் தீர்க்கிற பெரிய மருந்து.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்



அ ரு ள் வா க் கு

**‘சண்ட’ படத்தின் மூலம், ‘என்னால, சண்டைப் படம் எடுத்து ஜெயிக்க முடியும்’ என்று நிரூபித்துள்ள இயக்குநர் ஷக்தி சிதம்பரத்திடம் நாம் கேள்விகளை அடுக்கினோம்...**

1. நீங்க சினிமாத் துறைக்கு வரலன்னா என்னவாக ஆகியிருப்பீங்க?

ரொம்ப சின்னப்புள்ளத்தனமா கேட்கறீங்க! ஸாரி வேற கொஸ்டின் இருந்தா கேளுங்க சார்...



**நிஜத்திலேயும் நான் சிரிப்பை ரொம்ப விரும்புற ஆளு.**

# “நான்

*(நடிகை மாதிரி ஏதாச்சும் ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ்.ன்னு உதார் விடுவீங்கன்னு பார்த்தா...)*

2. சினிமாவுல மட்டும் ‘காமெடி’ காட்சி வைப்பீங்களா?

நிஜத்திலேயும் நான் சிரிப்பை ரொம்ப விரும்புற ஆளு. வேலை டயத்துல மட்டும் சீரியஸ்... மத்த நேரத்துல ரொம்ப ஜாலி டைப்...

*(சரி, சொல்றீங்க... நாங்களும் நம்புறோம்)*

3. உங்கள சிலர் ‘சிரிப்பு டைரக்டர்’ன்னு கிண்டல் பண்றதா கேள்விப்பட்டோம் உண்மைங்களா?

நான் தொடர்ந்து எடுத்த ‘என்னம்மா கண்ணு’, ‘மகாநடிகன்’, ‘இங்கிலீஷ்காரன்’... இந்த மூணு படங்களும் முழுநீள நகைச்சுவைதான். அதனால, இதப் பார்த்துட்டு என்னை சிரிப்பு டைரக்டர்ன்னு கிண்டலடிக்க ஆரம்பிச்சுட்டாங்க. ‘சண்ட’ படத்தை எடுத்து நான் யாருன்னு நிரூபிச்சுட்டேன்...

*(இப்போ அடுத்தடுத்து மூணு சண்டை படமா ஸார்?)*

4. காலேஜ் படிக்கறப்போ காமெடி பண்ணி எந்தப் பெண்ணையாவது ‘ரூட்’ விட்டிருக்கீங்களா...?

ட்ரை பண்ணிப் பார்த்தேன்.

**...டர் ஷக்தி சிதம்பரம்**

நம்ம 'ஜோக்கை'க் கேட்டு விழுந்து விழுந்து சிரிச்சிட்டு, 'சூப்பரா இருக் கண்ணே!' என்று முகத்துல 'கரி'யைப் பூசின பலருக்கு அண்ணனாகிப் போனேன்.

(ரொம்ப.... பாவம்... சார் நீங்க)

5. சினிமாவுல கதாநாயகனாக நடிக்கிற ஐடியா ஏதாச்சும் இருக்கா?

நமக்குத் தெரியாத விஷயத்தைச் செய்தால் ஜனங்க ரசிக்கமாட்டாங்க. அதுல நமக்கு உடன்பாடும் கிடையாது. எதாவது ஒரு வேலைதான் செய்யணும். நான் சொல்றது சரியா...?

(எப்படி இப்படியெல்லாம்...!)

6. உங்க பொழுதுபோக்கு என்னங்க?

ப்ரெண்ட்ஸ்களோட அரட்டை அடிக்கறது. சினிமா பார்க்கறது. பீச் பக்கம் போய் பெண்களோட கடலை போடற பசங்களைப் பார்த்து சந்தோஷம் அடைவது.

(ரொம்ப முக்கியம்!)

7. எதிர்கால இலட்சியம் என்னன்னு ஒரே வார்த்தையில சொல்லுங்க...

'ஆக்ஷன்' படம் பண்றது மட்டும்தான்

(உங்களுக்கும் 'சண்ட' போடத் தெரியுமா?)

8. உங்களைக் கவர்ந்த இயக்குநர்?

நான்தான்...!

(பரவால்ல, உண்மை பேசறீங்களே!

- முத்துராமலிங்கம்

# காமெடி டைரக்டரா..?!..



**பாரதிபாலன்**

# லதா என்னும்



லதாவின் அடர்ந்த மௌனம்தான் என்னைக் கூச்சலிடவிடுகிறது; புரிந்து கொள்ள முடியாத நீண்ட இடைவெளிதான் என்னை அர்த்தமில்லாதவனாக எண்ணத் தோன்றுகிறது. மனத்தில் பட்டதைச் சொல்லலாம்தானே? இப்படித் தள்ளித் தள்ளிக்கொண்டே போனால்? தயக்கமும் தடுமாற்றமும் இயற்கைதான்! அதற்காக இப்படியா? இந்த விளையாட்டிலே விழுந்திருக்கக்கூடாது; எந்தக் கண்காட்சியும் இல்லாமல் மன ஆட்டமும் இல்லாமல் இருந்திருக்கலாமே? எல்லாமே வாய் திறந்து சொன்னால்தானா? வாய் வார்த்தையை மீறி கண்ஜாடையைத் தாண்டி அவள் என்னோடு எத்தனை நெருக்கமாகப் பேசினாள்; அப்படி ஒரு துணிச்சலை ஆண்டவன் அவளுக்குக் கொடுத்திருப்பானா என்ன? இத்தனை அழகையும் வசீகரத்தையும் அப்படியே வடித்துக் கொட்டியவனுக்கு இது கூடவா தெரியாது!

லதா என்று அவளுக்கு ஒரு பேரும் வாய்த்துவிட்டது! ஏதோ அமிர்தத்தை அள்ளி அள்ளிப் பருகினாற் போல் ஓர் தித்திப்பு. தேவ வார்த்தை மாதிரி சுண்டி இழுக்கிற வசீகரம்! பேரில் என்ன இருக்கிறது? என்று பொத்தாம்பொதுவாகச் சொல்லி விடுகிறார்கள்! அவர்களுக்கு என்ன தெரியும்? 'லதா' என்று சொல்லிப் பாருங்கள். நாக்கால் வருடுவது போல... வேறு ஏதோ ஒரு சுகம், இதம் இப்படி எத்தனையோ...

ரோஸ் கலந்த வெளிர் நிறமும், பாண்ட்ஸ் பவுடர் வாசமும் எப்போதும் களைப்புக் காட்டாத முகமும்; வேறு எதோடும் சேர்த்தி இல்லாமல் தனித்துத் தெரியும் அவள்! எப்போதும் அவள் முகத்தில் சிரிப்பு நிறைந்திருக்கும். குளிர்ச்சியும் குதூகலமும் ஊட்டுகிற சிரிப்பு!

குழந்தையைக் குப்புறப் போட்டு அதன் முதுகிலே தாய் தட்டிக் கொடுப்பாளே அப்போது ஒருவிதக் கிறக்கத்தில் கிடக்குமே குழந்தை; அது மாதிரியான ஒரு கிறக்கம்தான் எனக்கு!

சிரிக்கும்போது மெல்ல விரிந்து, சுழி



# ஈர்ப்புமையம்

யிடும் உதடு. கனிந்து ததும்பும் கன்னங்கள்! இலேசாகப் புருவம் உயர்ந்து, சடக்கென்று குடை விரித்தாற்போல் படர்ந்து நிற்கும் புருவ அழகு!

ஒரு பெயர் இத்தனை வாசமாகவா இருக்கும்? இதுவரை நான் கண்டதில்லை! லதா என்று ஒலித்து ஒலித்து ஓய்ந்த பாடில்லை. அதிரும் நாதம்போல் என் நாடி நரம்பெல்லாம் நிறைந்து நிறைந்து ஒலித்துக்கொண்டிருக்கிறது. உள்ளே இருந்து ஒரு வாசம் கசிந்துகொண்டேதான் இருக்கிறது!

எங்கள் ஊரிலே மிகவும் அழகான தெரு அவள் வீடு இருக்கும் தெருதான்! அந்தத் தெருவுக்கு அப்படி ஓர் வசீகரம்! நான் அந்தத் தெருவுக்குப் போகத் தொடங்கிய நாள் முதல், இன்று வரை - இன்று வரை என்றால், அவளிடம் கடிபட்டு ரத்தம் சொட்டச் சொட்ட வந்து நிற்கின்ற இந்தக் கணம் வரை, ஒருகணம் மிஞ்சாமல் லதாதான் நிறைந்து நிற்கிறாள்!

இப்போது அவள் கோபத்தை நினைத்தால்கூட அவள் மீது கோபம் வரவில்லை. இது அவளின் அளவுக்கு மீறிய அன்புதான்! எப்போதும் இப்படியேவா இருக்கப் போகிறாள். முழுவதும் கத்தரித்துப் போட்டுவிடக் கூடிய பந்தமா இது?

இப்போது நீங்கள் ஒரு முடிவுக்கு வந்திருப்பீர்கள்; நானும் லதாவும் காதலர்கள். அப்படித்தானே? அப்படித்தான் என்றால் அது தவறு. இப்போதுதான் என் மனம் காதலுக்கான பதத்துக்கு வந்திருக்கிறது. என் மனத்தை ஊதி ஊதி அப்படியே கனிவித்தவள் லதா; அடிக்கடி பார்த்து, பேசிப் பழகி வந்த கனிவில்லை இது.

வழக்கமாக குழாயடிக்கு அவள் வரும் நேரத்தைவிட, அவள் வராமல் வெறுமையாக இருக்கும் குழாயடியின் நிழல் தேக்கி வைத்திருக்கும் அவளைப் பார்த்துப் பார்த்துதான் நான் அதிகம் கிளர்ச்சியுற்றிருக்கிறேன். அவளைப் பார்க்க வேண்டும்; நெருங்க வேண்டும் என்று மனம் கிளர்ச்சியுற்றாலும் அதற்கான தருணமாக அது இல்லை.

லதாவின் அம்மாதான் என் கிளாஸ்டீச்சர்! முத்து மீனா டீச்சர். என் ஐயா மாயாண்டித் தேவர்தான் லதாவின் வீட்டுக்கு பால் ஊற்றுபவர். எங்கள் வீட்டு பசும் பாலின் மகிமையை லதாவின் முகத்திலும் உடல் வனப்பிலும்தான் கண்டேன். அதோடு விட முடியாது. நான் ஓரளவு ஒழுங்காக உடுத்துகிறேன் என்றால்-இப்படியெல்லாம் யோசிப்பதற்கும் எழுதுவதற்கும் என் மூளையைப் பலமாக்கியதும் லதாவின் வீட்டுப் 'பொருள்'தான். பொருளில்லாருக்கு இவ்வுலகமில்லை!

எங்கய்யா, கடன் வாங்கி எங்கள்

உயிரை வளர்த்தார். நல்ல உடையைக் கொடுத்தார். கால்வட்டி அரை வட்டிக்குக் கடன் கொடுக்க, லதாவின் அப்பாவிடம் பணம் மட்டுமல்ல மனமும் நிறைந்து கிடந்தது. வாங்கிய கடனை வட்டியும் முதலுமாக அடைத்துவிட்டு நல்ல பேரைச் சம்பாதித்துக்கொண்டார். நான்தான் முத லுக்கே மோசம் பண்ணிவிடுவேன் என்று பயம்! இப்படிப் பயப்படுபவர்களைப் பார்த்துப் பயந்தால் ஆகுமா?

அன்பும் பிரியமும் நெஞ்சிலே உறைந்து கிடக்கும்வரை நிறைவாகத்தான் இருக்கிறது. அப்படியே அதைத் தேக்கித் தேக்கி நிறைக்க வேண்டும். அந்தப் பாரப் பளுவிலே கிறங்கிக் கிடக்கின்ற சுகமே அலாதி. அந்தப் பிரியத்தையும் அன்பையும் அலறிக் கொட்ட வேண்டுமா என்ன? இப் படிச் சத்தம் காட்டாமல்; உள்ளுக்குள்ளே பேசிக்கொண்டு, சிந்தித்துக்கொண்டு, இருப்பதிலேதான் அழகு? அர்த்தம், வாய் திறந்து சொன்னால்தானா?

லதாவின் நிசப்தம் எனக்குப் புரிகிறது. சட்டென்று திகிலாகவும் தோன்றுகிறது! எல்லா நேரங்களிலும் மௌனம் மௌன மாக இருப்பதில்லை. அதன் கூச்சலைப் புரிந்துகொள்கிறபோது அது பீதியாகிவிடு கிறது. சம்மதங்களுக்குச் சம்பந்தமில்லாத மௌனமோ என்கிறபோது வாதிக்கத் தொடங்கிவிடுகிறது. அவளின் அந்த நிசப்தத்தை உடைக்க வேண்டும்போல, ஓர் ஆண்ம வெறி எழும். அந்தக் கணமே 'அப்படிச் செய்தால் அது வெறும்' அசட் டுத் துணிச்சலாக இருக்குமேயொழிய, லாபமிராது என்ற எண்ணமும் எழுந்து விடுகிறது! இரைச்சலிலும் கூச்சலிலும் உலாவிய மனசுக்கு அந்த நிசப்தம் ஆறு தலாக இருக்காதுதான். அதற்காக அவளுக் குச் செய்தியே தெரியாது என்று அர்த்த மாகிவிடுமா என்ன?

அவளுக்கு என்னைத் தெரியும்! அவளை எண்ணி எண்ணி ஓய்ந்தபோதெல்லாம், மனத்தை ஒழப்பிக்கொண்டிருக்கிறேனே அதுவும் அவளுக்குத் தெரியும். இப்படி மனத்தைப் புண்ணாக்கி, குதறி வைத்திருக் கிறேனே இதுகூட அவளுக்குத் தெரியும். இதற்கெல்லாம் என்ன மருந்து என்றும் தெரியும். அத்தனையும் தெரிந்துகொண்டு தான் இப்படி அழுத்தமாக இருக்கிறாள். ஒன்றும் அறியாததுபோல முகத்தைத் திருப்பி வைத்துக்கொள்கிறாள். 'இதெல் லாம் எத்தனை நாளைக்காம்! குட்டு உடை யாமலா போய்விடும்!' என்று காலத்தை நம்பி ஒக்காந்திருக்கின்ற பொறுமை யில்லை. அந்தப் பொறுமைதான் என்னைப் போட்டுப் பொசுக்கி எடுக்கிறது.

அந்தச் சூட்டின் தகிப்பைத் தாங்க முடியாமல்தான் தாண்டிவிட்டேன்.

''லதா, ஒங்கிட்ட எப்படிக் கேக்குறதுனு தெரியலை.''



'பேசாதே' என்பதுபோல் வாயில் விரலை வைத்துக் காட்டினாள்.

'ஏன்?' என்பதுபோல் சமிக்ஞையாகக் கேட்டேன்.

வீட்டின் பின்புறம் ஆட்கள் நடமாடும் திசையை நோக்கிக் கையை நீட்டினாள்.

''இருக்கட்டுமே'' என்றேன்.

'' நீ பேசுறது நல்லா இருக்கு!''

'அதன் அர்த்தம் என்ன?' வாய்விட்டுக் கேட்கவில்லை. அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

''லதா, இப்படி ஒண்ணுமே பேசாம

இருந்தா என்ன அர்த்தம்?''

''என்னை விட்டுரு!''

''என்ன சொல்றே?''

''நீ ஏங்கிட்ட ஏதுவும் பேச வேண்டாம். இப்படிப் பாக்க வர வேண்டாம்'' என்று முகத்தைத் திருப்பிக்கொண்டாள். மாலை வெயில் அவள் முகத்தில் ஏறிவிட்டது!

''வந்தா என்ன செய்வ நீ?''

உரிமை எடுத்துக்கொண்டு, நான் அப்படிக் கேட்டதும், அப்படிக் கேட்கும்போது என் வாய் குழறியதையும், முகம் குலைந்ததையும் கண்டு அவள் சிலிர்த்தாள். ஆனாலும் நிலை தடுமாறாமல் இருக்கிறாள். அவள் என்னைக் கூர்ந்து கவனிப்பது தெரிந்தது. மனம் அலுங்காமல் அந் தப் பார்வை வராது!

''இப்படிப் பேச நீ எங்க படிச்சே?''

நிமிர்ந்து அவளை புன்னகையுடன் பார்த்தேன்.



''தலைவரே! உங்களை யாரு கொலை பண்ணப் போறாங்க. எதுக்கு பாதுகாப்பு கேட்கறீங்க?''

''கட்சில நான் மட்டும் தனியா இருந்தா பயமா இருக்காதா?''

- சென்னிமலை சி.பி. செந்தில்குமார்

''நீ இப்படி இருப்பேன்னு நா நெனைக்கலை.''

''நா ஒனக்கு இடஞ்சலா இருக்கனா?''

குறுஞ்சிரிப்புடன் நான் அவளைப் பார்க்க, அவள் என்னை ஊடுருவிப் பார்த்தாள்.

''எனக்கு மனசே சரியில்லை.''

''ஏன்?''

''ஏன்னு கேட்டா?''

''என்னவோ மறைக்கப் பாக்கறே?''

''எதுக்கு இந்த வம்புனு வருது...''

''விட்டுட்டா சரியாயிடுமா?''

''எதை?''

''ம்...தெரியாதாக்கும்.''

சிறிது நேரம் எங்கோ பார்த்துவிட்டு, ''இந்த ஊரைவிட்டுப் போனாச் சரியாயிடும்'' என்றாள்.

''போயேன்'' என்றேன்.

''கிறுக்கு மாதிரிப் பேசாத!''

''நான் கிறுக்கன்தான்!''

அதற்குப் பிற்பாடு மனம் எதிலும் ஓடவில்லை. தெருவையே பார்த்துக் கொண்டிருந்தேன். சிறிது அமைதிக்குப் பிறகு, என் கவனத்தை இழுப்பது போல லதா தாவணியைச் சரி செய்துகொள்ளும்போது அதிர்ந்தது வளையல் ஒலி! என் மனம் அடித்துப் போட்டது போல வலித்தது. இதற்குத்தானா தவியாத் தவிச்சுக்கிட்டிருந்தோம்! மேற்கொண்டு ஒன்றும் பேசமுடியவில்லை. தொண்டைக் குழியில் திரளும் வார்த்தைகள் எல்லாம் வழுக்கிக் கொண்டே போயின. அவள் உதட் டில் ஒழுகும் சிரிப்பு வறண்டு கிடந்தது. அந்தச் சிரிப்பைப் பார்க்க வேண்டும். மாறாத அவளுடைய சிரிப்பை மட்டுமே நான் பார்க்க வேண்டும். ஏக்கம் இழுத்துப் பிடித்துக் கொண்டது.

''நான் கிளம்புகிறேன்.''

''உன் இஷ்டம்.''

''லதா, ஏதாவது...?''

''அப்படி ஒண்ணுமில்லே...''

''பின்ன?''

''கிளம்பு.''

''ம்...''

நான் கண்ணை மூடிக்கொண்டேன். துக்கம், சுகம் எல்லாம் வரது போறதுமாத்தான் இருக்கும். அதைத் தடுக்கவா முடியும்? போலியாக, பொய்யாக, மனத்தைச் சமாதானப்படுத்த முடியவில்லை. இந்த வார்த்தையை வேறு யாரிடமாவது சொன்னால் கவர்ச்சியாக, ஏன் ஆறுதலாகக் கூட இருக்கும்.

லதா ஊரைவிட்டுப் போய்விட்டாள். என் காதல் மட்டும் குடித்தனம் கலைந்த அவள் வீட்டில் சுற்றிச் சுற்றி வந்து எதையோ தேடிக் கொண்டேயிருக்கிறது. ●

# நீர் விளையாட்டு



வெள்ளி நண்டுகளைத் துரத்தி
ஏமாறுகிறார்கள்
இரண்டு சிறுவர்கள்

தொடர்ந்து
ஏமாற்றிக்கொண்டேயிருக்கின்றன
நண்டுகள்

குடும்பம் பிழைக்கும்பொருட்டு
மீன்பிடிக்கச் சென்றுள்ளான்
கணவன்

புயல் அறிவிப்பு
கேட்டதைத் தொடர்ந்து
வழக்கத்துக்குமீறி
பன்மடங்கு அதிகமாய்
அடித்துக்கொள்ளும் இதயத்தோடு
கரையில் நின்றிருக்கிறாள்
அவன் மனைவி

அலையில் மிதக்கும்
அவளின் மனத்தை
கால்பந்தென நினைத்து
பாறையை நோக்கி
உதைத்து விளையாடுகிறது
கடல்

முத்துவேல்





# போப் ஆண்டவர் சொல்லியும் கேட்கவில்லை!



இருபத்தோராம் நூற்றாண்டிலும் மாறாத ஜாதிக் கொடுமை, நமது நாட்டில் அவ்வப்போது ஆங்காங்கே பெரிதாக வெடித்து, உயிர்ப் பலி கொள்வது தொடர்கிறது. மார்ச் 7, 8 தேதிகளில் எறையூர் இதற்கு இரையானது.

புனித ஜெபமாலை அன்னை ஆலயத் துக்குச் செல்ல இரண்டு பாதைகள் - ஒன்று, உயர் ஜாதி கிறிஸ்தவர்கள் என தங்களைக் கூறிக்கொள்ளும் பிரிவினருக்கு; மற்றது தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கு! ''இந்தக் கொடுமையை எதிர்த்துக் குரல் கொடுத்து



அலுத்துப் போய்தான் நாங்கள் எங்களுக் கென்று தனியே ஒரு தேவாலயத்தைக் கட் டிக் கொண்டோம்'' என்கிறார் எறையூர் கிராமத்து தலித் இளை ஞர் ஒருவர். ''தூம்பா என்னும் பிரேத வண்டிகள்கூட இரு பிரிவினருக்கும் வெவ்வேறாக இருக்கின்றன'' என நொந்து பேசுகிறார் அவர். ''எங்களுக்கான தூம்பா எங்கள் பிரிவினருக்கான கல்லறை அருகே நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும்; அவர் களுடையது மட்டும் தேவாலயத்திலேயே இருக்கும்...'' என்கிறார். இதையெல்லாம் எதிர்த்து, தாழ்த்தப்பட்ட கிறிஸ்தவர்கள், தங்கள் தேவாலயத்தில் தொடர் உண்ணா விரதப் போராட்டம் நடத்த, அதே எறை யூரின் வன்னிய கிறிஸ்தவர்கள் ஒலி பெருக்கி மூலம் அவர்களை ஏசியதாகச்

## புகையும் எறையூர்

**"பிற்படுத்தப்பட்டவங்களோட ஒத்துப் போயிடுங்க. இல்லாட்டி குண்டர் சட்டத்துல உள்ளே போட்டுடுவோம்னு பயம் காட்டுறாங்க!"**



* லீமா ரோஸ்

சொல்லப்படுகிறது. நிலவரத்தைக் கட்டுப்படுத்தி, கண்டிப்பதற்குப் பதிலாக போலீஸ் வெறுமே வேடிக்கை பார்த்தது என்பது குற்றச்சாட்டு. உணர்ச்சிகள் பெருகி, தங்கள் கோயிலையும் பேராயத்தின் தனிப் பங்காக அறிவிக்காவிட்டால் புனித ஜெப மாலை ஆலயத்தை இழுத்துப் பூட்டப் போவதாக எச்சரித்துப் போஸ்டர் அடித்து, அதை தேவாலய கதவுகளிலேயே ஒட்டியிருக்கின்றனர் அந்த மக்கள். இது பொறுக்காமல் எதிர்த்தரப்பினர் தாக்க, இவர்கள் பயந்து ஓட... தொடர்ந்த கலவரத்தில் வீடுகளுக்கும் உடைமைகளுக்கும் நிறைய சேதம். போலீஸ் துப்பாக்கிச் சூடு நடத்தியதில் இரண்டு உயிர்கள் பலி!

**நா**ம் எறையூர் சென்றிருந்தபோது மாரியம்மாள் என்ற தாழ்த்தப்பட்ட இந்து பெண்மணியின் கைகளிலும் பலத்த காயம் இருப்பதைக் கண்டோம். பிரச்னையில் சம்பந்தப்பட்டோர், படாதோர் என விழுப்புரம் மருத்துவமனையில் பதின்மூன்று பேர் காயங்களுடன் படுத்துக் கிடந்தனர்.

* அலெக்ஸாண்டர்



**"பொதுப்பாதையில் வருவோம் என்று அடம் பிடிக்கிறார்கள். இதுதான் பிரச்னையைக் கிளப்புகிறது"**

நடக்க ஆரம்பித்துள்ள விசாரணைகூட நியாயமாக இல்லை என்று குற்றம் சாட்டுகிறார் தி.மு.க.வைச் சேர்ந்த முன்னாள் மாவட்ட கவுன்ஸிலரான லீமா ரோஸ். ''ஆர்.டி.ஓ. விசாரணையில் வன்னிய இளைஞர்களை மிரட்டறாங்க; 'பிற்படுத்தப்பட்டவங்களோட ஒத்துப் போயிடுங்க. இல்லாட்டி குண்டர் சட்டத்துல உள்ளே போட்டுடுவோம்'னு பயம் காட்டுறாங்க!'' என்கிறார் ரோஸ்.

''பிற்படுத்தப்பட்ட கிறிஸ்தவர்களை பேதப்படுத்தவில்லை. அவர்கள் வசிக்கும் காலனி பகுதியிலிருந்து தேவாலயத்துக்கு வர நல்ல கான்கிரீட் சாலை இருக்கிறது. ஆனால், அவர்கள் சுற்றி வளைத்துக் கொண்டு பொதுப்பாதையில் வருவோம் என்று அடம் பிடிக்கிறார்கள். இதுதான் பிரச்னையைக் கிளப்புகிறது'' என்கிறார் தி.மு.க. இளைஞர் அணி கிளைக் கழக அமைப்பாளர் அலெக்ஸாண்டர்.

இப்பகுதி எம்.எல்.ஏ. ரவிக்குமாரிடம் (விடுதலைச் சிறுத்தைகள்) தொலைபேசியில் தொடர்பு கொண்டோம். ''நம் நாட்டில் உள்ள தலித்துகளில் எழுபது சதவிகிதத்தினர் கிறிஸ்தவ மதத்தவர். அவர்களுக்கு இந்த நிலை நீடிப்பது ஏன் என்று தெரியவில்லை. இந்து மதத்தைக் காட்டிலும் இங்குதான் தீண்டாமை வெறி அதிகமாக இருக்கிறது. வாடிகன் நகரில் 2003ஆம் ஆண்டு நடந்த பாதிரியார்களுக்கான சிறப்பு வகுப்புகளில், போப் ஆண்டவர் நல்ல வழிநடத்துதல் கூறினார். சாதிய தீண்டாமையைக் கடுமையாகச் சாடினார்; ஏசுவின் முன்பாக அனைவரும் சமம் என்று அறிவுரை கூறினார். எறையூர் மட்டுமல்ல, இந்தியாவில் யார், எங்கு இந்த அறிவுரையை மீறினாலும் அவர்கள் ஏசுநாதருக்கு விசுவாசிகள் அல்ல!'' என்று மிக வருந்திச் சொன்னார் ரவிக்குமார்.

*செய்திச் சித்திரம் :*

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# பார்த்திபன் கனவு

## 32. உறையூர் சிறைச்சாலை



விக்கிரமன் உறையூர் சிறைச்சாலையில் ஒரு தனி அறையில் அடைக்கப்பட்டிருந்தான். சிங்காதனம் ஏறி செங்கோல் செலுத்த வேண்டிய ஊரில் சிறையில் அடைக்கப்பட்டுக் கிடப்பதை நினைத்து, அவன் துயரச் சிரிப்புச் சிரித்தான். அவனுடைய தந்தை அரசு செலுத்திய காலத்து ஞாபகங்கள் அடிக்கடி வந்தன. பார்த்திப மகாராஜா போர்க்கோலம் பூண்டு கிளம்பிய காட்சி அவன் மனக் கண் முன்னால் பிரத்யட்சமாக நின்றது. அதற்கு முதல்நாள் மகாராஜா இரகசிய சித்திர மண்டபத்துக்குத் தன்னை அழைத்துச் சென்று, தம்முடைய கையால் எழுதிய கனவுச் சித்திரங்களைக் காட்டியதெல்லாம் ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தன. ஐயோ! அவையெல்லாம் 'கனவாகவே போக வேண்டியதுதான் போலும்!' தந்தைக்குத் தான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றலாமென்னும் ஆசை அவனுக்கு இதுவரையில் இருந்தது. இப்போது அடியோடு போய்விட்டது. பல்லவ சக்கரவர்த்தியின் கட்டளையை எதிர்பார்த்து இந்தச் சிறைச்சாலையில் எத்தனை நாள் கிடக்க வேண்டுமோ தெரியவில்லை. அவரிடமிருந்து என்ன கட்டளை வரும்? மரண தண்டனையை நிறைவேற்றும்படிதான் அநேகமாகக் கட்டளை வரும்.

அமரர் கல்கி

மாரப்பன் அந்தக் கட்டளையை நிறைவேற்றச் சித்தமாயிருப்பான். தன்னுடைய கதியைப் பற்றி யாருக்கும் தெரியவே போவதில்லை. பார்த்திப மகாராஜாவின் பெயராவது ஜனங்களுக்குச் சில காலம் ஞாபகம் இருக்கும். தன் பெயரைக்கூட எல்லோரும் மறந்துவிடுவார்கள்.

செண்பகத் தீவிலிருந்து ஏன் திரும்பி வந்தேன்? - என்னும் கேள்வியை விக்கிரமன் அடிக்கடி கேட்டுக் கொண்டான். சின்னஞ்சிறு தீவாயிருந்தாலும் அங்கே சுதந்திர ராஜாவாக ஆட்சி செய்தது எவ்வளவு சந்தோஷமாகயிருந்தது! அதைவிட்டு இப்படித் தன்னந்தனியே இங்கே வரும் பைத்தியம் தனக்கு எதற்காக வந்தது?

அந்தப் பைத்தியத்தின் காரணங்களைப் பற்றியும் அவை எவ்வளவு தூரம் நிறைவேறின என்பது பற்றியும் விக்கிரமன் யோசித்தான். செண்பகத் தீவிலிருந்தபோது பொன்னி நதியையும் சோழவள நாட்டையும் எப்போது பார்க்கப் போகிறோம் என்ற ஏக்கம் மீண்டும் மீண்டும் அவனுக்கு ஏற்பட்டு



# கல்கி



பக்கம் 41-72 வரை பிரித்தெடுத்து பின் செய்து பாதுகாத்து வையுங்கள்

KALKI • 20.4.2008 • சிறப்புப் பக்கங்கள்



## மீனாக்ஷிக்கு மங்களம்

### சிலிர்ப்பூட்டும் சித்திரைத் திருவிழா



# திகைக்க வைக்கும் திருவிழா நகரம்!

"இணைவிழியிமையாநாட்ட மெய்திய தோன்றும் / பணைநெடும் புவன மிந்தப் பார்வைசற்றிமைக்கு மாயின்..." என்று வெகு நுட்பமாக எச்சரித்து நீள்கிறது சௌந்தர்யலகரி பாடலொன்று. இமையா விழியாளான மீனாக்ஷி சற்றே கண்ணிமைத் தாலும் உலகு இருண்டுவிடும் என்பது ஐதீகம். அதனாலேயே மதுரையில் நித்திய திருவிழா நடக்கிறது என்கிறார்கள்!

"இந்த எச்சரிக்கைக்காகப் பயந்துக்கிட்டு திருவிழா எடுக்கலவே...! மீனாக்ஷி எங்க வூட்டுப் பொண்ணுங்கறதால பன்னெண்டு மாசமும் நாங்க விழா எடுத்துக் கொண் டாடுறோம். இதுல ஏனய்யா ஒங்களுக்கு இத்தினி பொறாமை?" என்று 'சவுண்டு' விட்டது மதுரைக்கார இளசு ஒன்று!

பின்னர் அந்த மதுரைக்கார இளசே, நமக்கு உட்கார இடம் தந்து, கோயில் திருவிழாக்களை தன் பாணியில் பட்டியல் இட்டது :

மொதல்ல, பங்குனி மாசத்து லேர்ந்து 'ரிவர்ஸா' சொல்லி வாரேன். அப்பத்தான் சித்திரை மாசப் பெருவிழா, பட்டியல்ல முத்தாய்ப்பா முடியும்.

பங்குனி மாசத்துல சாரதா உற்சவம். பத்து நாளைக்கு மாலை வேளையில், வெள்ளி யம்பலத்து ஊஞ்சல்ல உக்காந்து சுந்தரேசு வரரும் மீனாக்ஷியும் பக்தர்களுக்குக் காட்சி தருவாங்க. இது பங்குனி மாசக் கார்த்திகை நட்சத்திரத்துலேர்ந்து உத்தரம் நட்சத்திரம் வரைக்கும் நடக்கும். சுவாதி நட்சத்திரத்து அன்னைக்கு ரெண்டு பேரும் ஜோடியா திருப்பரங்குன்றம் போய்டுவாங்க. மகன் முருகப்பெருமானுக்கு அங்கு திருக்கல்



யாணம். அம்மா - அப்பா வாச்சே... கல்யாணத்தை நடத்தி வைக்கணுமா இல்லியா? அன்னைக்கு நைட்டே மதுரைக்கு வந்து சேர்ந்திடுவாங்க மீனாக்ஷி யும் சுந்தரேசுவரரும்.

**மா**சி மாசம் பெரிய உற்சவம். இது பல பேருக்குத் தெரியறது இல்லே. நாப்பத்தியெட்டு நாளு மண்டல உற்சவம். மாசி - பங்குனி ரெண்டு மாசத்துலயும் கலந்து கட்டி நடக்கும்.



★ மீனாக்ஷிக்குக் கொடியேற்றம்...

**தை** மாசம் வந்திடுச்சன்னா, தெப்பம். பத்து நாளைக்கு தினசரி ஒவ்வொரு வாகனத்துல சுவாமி உலா வருவாங்க. வண்டியூர் தெப்பக்குளம்தான், மீனாக்ஷி சுந்தரரேசுவரர் திருக்கோயிலுக்கும்.

**மா**ர்கழி மாசத்துல பத்து நாளு எண்ணெய்க் காப்பு உற்சவம். திருவெம்பாவை உற்சவம்னு இதைச் சொல்லுவாங்க. ஓதுவார்கள் அஞ்சு பேரு, நடராஜர் சன்னதியில மாணிக்க வாசகர் முன்பாக திருவெம்பாவைப் பாடல்களை ராகமாப் பாடுவாங்க - அதிகாலை அஞ்சரை மணியிலேர்ந்து ஏழு மணி வரைக்கும். மார்கழி சதய நட்சத்திரம்டு திருவாதிரை நட்சத்திரம், ஆக இந்தப் பத்து நாளும் சுவாமி புறப்பாடு கிடையாது. மாணிக்கவாசகர் மட்டுமே புறப்பாடு பண்ணுவார். பதினோராம் நாள்ல சுவாமி - அம்பாள் ரிஷப வாகனத்துல ஆடி வீதியில உலா வருவாங்க.

**கா**ர்த்திகை மாசத்துல பத்து நாள் தீப உற்சவம். கார்த்திகை தீபத்தன்னைக்கு (கார்த்திகை நட்சத்திரம்) மீனாக்ஷி அம்மன் சன்னதியிலும், சுந்தரேசுவரர் சன்னதியிலும் சொக்கப்பனை கொளுத்துவாங்க.

**ஐ**ப்பசி மாசம் பிரதமையிலேர்ந்து சஷ்டி வரைக்கும் ஆறு நாட்கள் கோலாட்ட உற்சவம். மாலை ஆறிலேர்ந்து நைட்டு எட்டு மணி. புது மண்டபத்துல அம்மன் எதிர்ல, மதுரை இளவெட்டுப் பெண்களின் கோலாட்டம் நடக்கும்.

**பு**ரட்டாசி மாசத்துல, எல்லா ஊர்லயும் நடக்கற மாதிரி நவராத்திரி உற்சவம். அந்த ஒன்பது நாளைக்கும் மீனாக்ஷி அம்மன் சர்வ அலங்காரங்களோட காட்சி தருவாங்க.

**ஆ**வணி மாசம், பத்து நாள் திருவிழா. ஆவணி மூல விழா. மூல நட்சத்திரத்தப்ப இரவு சுந்தரேசுவரருக்குப் பட்டாபிஷேகம். பத்தாம் நாள் பிட்டுக்கு மண் சுமந்ததைக் கொண்டாடுற திருவிழா. பதினொராம் நாளு விறகு வித்தல்.

**ஆ**டி மாசத்துல ஆயில்ய நட்சத்திரம். பத்து நாளைக்கு முளைக்கொட்டு உற்சவம். இதுல மீனாக்ஷிக்கு மட்டுமே கொடியேத்துவாங்க.

**ஆ**னி மாசம் மகம் நட்சத்திரத்துலேர்ந்து பத்து நாளைக்கு ஊஞ்சல் உற்சவம். தினசரி சாயந்தரம் ஆறிலேர்ந்து நைட்டு ஒன்பது மணி வரைக்கும். நூறு கால் மண்டபத்துல ஒரே ஊஞ்சல்ல மீனாக்ஷியும் - சுந்தரேசுவரரும். கோயில் ஸ்தல ஓதுவார், மாணிக்க வாசகரின் 'பொன்னூஞ்சல்' பாடல்களை ராகமாப் பாடுவாரு.

**வை**காசி மாசம் கோடை வசந்தம். திருவாதிரைலேர்ந்து பத்து நாள் எண்ணெய்க் காப்பு. அப்புறம் சித்திரைப் பெருவிழாவுக்காக வைகாசி மாசக் கடைசில, ஒருநாள் கோயில்ல கொடியேத்துவாங்க. இப்ப ரொம்ப ஹைலைட்டான சித்திரைப் பெருவிழாவுக்கு ஸ்ட்ரெய்ட்டா வந்துடறேன்.

**சி**த்திரை மாசம் எட்டாம் திருநாள் இரவு துலா லக்னத்தில் மீனாக்ஷி அம்மனுக்குப் பட்டாபிஷேகம். ஒன்பதாம் நாள் காலையும் மாலையும் மீனாக்ஷி திக்விஜயம். பத்தாம் நாள் காலை மீனாக்ஷி சுந்தரேசுவரர் திருக்கல்யாணம். பதினொராம் நாள் காலை மீனாக்ஷி -சுந்தரேசுவரர் சித்திரை திருத்தேர். மறுநாள் சித்ரா பௌர்ணமியன்னைக்கு கள்ளழகர் வைகை ஆத்துல எறங்குவாரு. இந்தப் பத்துப் பன்னெண்டு நாள் திருவிழாவுல மதுரையே மக்கள் வெள்ளமா மாறிப் போயிடும். ○

# கொத்துக் கொத்தாக முடி கொட்டுவதைத் தவிர்க்க இயலுமா?

# நிச்சயமாக இயலும்!

## வழங்குகிறோம் புதிய மேம்படுத்தப்பட்ட ஆற்றல் மிகுந்த

# ஹேர் ப்ளஸ் ஹேர் ஆயில்

ஆம்! ஹேர் ப்ளஸ் ஹேர் ஆயில் இந்தியாவின் பாரம்பரியம் மிகுந்த சித்த வைத்திய முறையில் **Rare Herbals** என்றழைக்கப்படும் அதி அற்புதமான அரிய வகை மூலிகைகளின் பசுமையான சாறு, வேர்கள் மற்றும் இயற்கை மூலப்பொருட்கள் கொண்டு மிக மிகப் பிரத்யேகமான தயாரிப்பு முறைகளில் தயாரிக்கப்பட்டுள்ளது. கொத்துக் கொத்தாக முடி கொட்டுதல், பொடுகு, பூச்சிவெட்டு, இளநரை, செம்பட்டை, தலையில் செதில் செதிலாக வெண்மை நிறத்தில் தோன்றுதல், தலை அரிப்பு, தலைவலி, டென்ஷன், முதலியவற்றைப் போக்கி அடர்த்தியான நீண்ட கூந்தல் செழித்து வளரச் செய்கின்றது. ஒரு முறை உபயோகித்துப் பாருங்கள். மிகவும் அற்புதமான மாற்றத்தை உணர்வீர்கள்.




**அனைத்து மருந்துக் கடைகள் மற்றும் டிபார்ட்மெண்டல் ஸ்டோர்களில் கிடைக்கும்.**

---

**ஹேர் ப்ளஸ் ஹேர் ஆயில் விழாக்கால தள்ளுபடி கூப்பன்**

அன்பார்ந்த வாசகரே கீழே உள்ள படிவத்தைப் பூர்த்தி செய்து உங்கள் அருகிலுள்ள கடைக்காரரிடம் கொடுத்து ஹேர் ப்ளஸ் ஹேர் ஆயில் வாங்கும் பொழுது ரூ.20/- தள்ளுபடி பெறுங்கள்.

பெயர் : ..............................

முகவரி : ..............................

**தள்ளுபடி Rs.20/-**

அன்பார்ந்த கடைக்காரரே, இந்தப் படிவத்தைக் கொண்டுவரும் வாடிக்கையாளருக்கு Hair Plus Hair Oil வாங்கும் பொழுது ரூ.20/- தள்ளுபடி செய்து கொடுக்கவும். கமிஷனும் கட்டணம் ரூ.1.00 சேர்த்து ரூ.21.00 உங்களது அடுத்த பில்லில் கழிக்கப் படும்.



மீனாக்ஷி, சொக்கநாதர்-
பிரியாவிடை, தரிசனம்

''மாசம் மும்மாரி
மாறாம மழ பெஞ்சி
எங்க மனசு குளிரணும் சாமி
வைகையில நீ இறங்கி
வளம் பெருகணும் பூமி...''

- வருடம் முழுக்க மதுரையைச் சுற்றி ஒலிக்கிற கிராமியப் பாடல்களில் ஒன்று இது. இதைப் போலவே மீனாக்ஷி சொக்கநாதர் திருமணத்தைச் சொல்லும்விதமாக, 'வாரி அணைச்சாராம் சொக்கர், வலதுபுறம் தோளணைய' என்னும் பாடலும் பரவலாக மதுரை கிராமங்களில் மகிழ்ச்சியுடன் பாடப்படுகிறது. சித்திரைத் திருவிழா என்பது நகரத்திலிருப்பவர்களுக்கு, அது நடக்கிற மாதத்தில் பேசப்படுகிற ஒரு விஷயம் என்பதோடு சரி. ஆனால், கிராமத்திலிருப்பவர்களுக்கு வருடம் முழுக்கவே அதனைப் பற்றிய எண்ணங்கள் விரிந்துகொண்டே இருக்கின்றன.

கள்ளர் மலையிலிருந்த மக்கள், இறங்கி வந்து வெவ்வேறு கிராமங்களில் வாழத் துவங்கினர். எங்கு சென்று பிழைப்பு நடத்தினாலும் தங்கள் கள்ளர் மலை திருமாலையே வணங்குவதில்தானே அவர்களுக்கு நிம்மதி! அதனால், அழகர் ஆற்றில் இறங்குகிற அன்றைய தினத்தில் தரிசனம் பெற, அத்தனை மக்களும் வைகைக்கு வந்து திரள்கிறார்கள். சண்டை, சச்சரவு, பூசல், மனஸ்தாபம் எல்லாம் மாயமாய் மறைய, அழகரைக் கொண்டாடவும் சித்திரைத் திருவிழாவை நடத்தவும் ஒன்றுபடுகிறார்கள். அந்த பத்து - பன்னிரண்டு

# வாரி அணைச்சாராம் சொக்கர்!

# மதுரை வாய்ஸ்

**சிவ. பார்வதி [ஆன்மிக இதழ் பதிப்பாளர்]:**

**கிராம மக்கள், மாட்டு வண்டி கட்டிக்கிட்டு வந்துடுவாங்க. வைகை ஆற்றின் நீள வட கரை முழுவதுமாக மாட்டு வண்டிகள் அணிவகுத்து நிற்கும். ஒரு வாரம் தங்கி விடுவார்கள். இங்கு மதுரையில் மீனாக்ஷி கல்யாணத்தன்னைக்கு, அழகர் கோயில்லேர்ந்து கள்ளழகர் கிளம்பி வருவார். அவர் பின்னாடியே மாட்டு வண்டியில ஏறிக்கிட்டு வர்ற கிராம மக்கள், கள்ளழகர் கிளம்பும்போதுதான் திரும்பிப் போவாங்க. மீனாக்ஷிக் கல்யாணத்தை மதுரைவாசிகள், தங்கள் வீட்டுக் கல்யாணமாகவே கொண்டாடுவாங்க. அன்றைக்கு மட்டும் மதுரைல ஒவ்வொரு வீட்டு மதியச் சாப்பாட்டிலயும், ஒரு கிண்ணம் பாயசம் அவசியம் இடம் பிடித்திருக்கும்!**



நாட்களும் மதுரையேகூட ஒரு பெரிய கிராமமாகத்தான் தோன்றும்.

பழனிக்கும், சபரிமலைக்கும் பாதயாத்திரை செல்வதைப் போலவேதான் மதுரையைச் சுற்றியிருக்கிற வெவ்வேறு கிராமங்களிலிருந்து சித்திரைத் திருவிழாவுக்கும் பாதயாத்திரை வருவார்கள். கறுப்பு நிற டிரவுசரும், கழுத்தில் மாலைகளும் தோளில் தண்ணீர்ப் பையுமாய், வீதி முழுக்க சந்தன மணத்தைப் பரப்பியபடி, தண்ணீர் பீய்ச்சியடிக்கும் 'கோமாளிகள்' இத்திருவிழாவுக்கு தனி அழகு சேர்ப்பவர்கள். இப்படித் தண்ணீர் அடிப்பதன் மூலம் வருடம் முழுக்க இதே போல் வருண பகவான் குறையின்றி மழை கொடுப்பார் என்பது நம்பிக்கை. வெவ்வேறு ஊர்களிலிருந்து வரும் மனிதர்களுக்கு, கோடையின் கடுமை தெரியாமலிருக்கவும் இப்படித் தண்ணீரைப் பீய்ச்சியடித்து சாந்தப் படுத்துகிறார்கள்.

வெவ்வேறு ஊர்களிலிருந்து வருகிற இந்த கோமாளிகள்தான் தீப்பந்தம் ஏந்தி வெளிச்சம் கொடுத்து, கள்ளழகரை எதிர் சேவை செய்து அழைத்து வருபவர்கள். ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் குழுக்களாக வருகிற இவர்களுக்கு முன்னால் மேள, தாளங்களோடு ஆட்டம் பாட்டமென அமர்க்களம்தான்!

ஆங்காங்கே எதிர்ப்படுகிற பக்தர்களுக்கு ஆசீர்வாதம் வழங்கிக்கொண்டு இவர்கள் வருகிறபோது, இவர்களைக் கள்ளழகராகவே நினைத்து பக்தர்கள் வணங்குவார்கள்.



✱ மீனாக்ஷி அம்மன் கோயில் நுழைவாயில்...

உண்மையில் சித்திரைத் திருவிழா முழுக்க முழுக்க கிராமத்துக்காரர்களுக்கானதுதான். ஏனெனில், மலையிலிருந்து வரும் சுவாமியை ஊர் எல்லையில் எதிர் சேவை செய்து வரவேற்பதும், இறுதியாக அவரை வழியனுப்பி வைப்பதும் 'கருப்பணசுவாமி' என்கிற கிராமிய தெய்வம்தான்.

கிராமங்களில் பங்குனி, சித்திரை மாதங்களில் வெவ்வேறு இடங்களில் ஊர்த் திருவிழாக்கள் நடைபெறும். அவற்றை நிரம்ப கருத்தாகவும் உற்சாகமாகவும் கொண்டாடுவர் உள்ளூர் மக்கள். தங்கள் பகுதி திருவிழாக்களில் எடுத்துக்கொள்கிற அதே அக்கறையை சித்திரைத் திருவிழாவிலும் எடுத்துக் கொண்டு, மதுரையில் கிராம மக்கள் திரண்டுவிடுகிறார்கள். இயந்திர வளர்ச்சி எவ்வளவோ மாற்றங்களைக் கொண்டு வந்துவிட்டிருந்தாலும் காலம் காலமாக இம்மக்கள் கொண்



# பூப்பல்லக்குத் திருவிழா!

கள்ளழகர் மலைக்குத் திரும்புகிறபோது, நான்காவது நாள் அவருக்கு நடத்தப்படுகிற பூப்பல்லக்குத் திருவிழா மிகவும் பிரசித்தமானது. முழுக்க, முழுக்க பூக்களால் அலங்கரிக்கப்பட்ட பல்லக்கில் சர்வ அலங்காரங்களுடன் அழகர் உலா வருவார். மீனாக்ஷியம்மன் தேரோட்டத்தைப் போலவே அலங்காரமும், அழகும் நிறைந்த நிகழ்ச்சி இது.

நான்காவது நாள், கருப்பணசுவாமி கோயிலில் வைத்து பூப்பல்லக்கு தயாராகும். நீண்ட நேரம் அலங்காரம் செய்து புறப்படுவதற்கு எப்படியும் அதிகாலை நான்கு, ஐந்து மணியைத் தாண்டி விடும்! பல்லக்கு முழுக்க பூத்தோரணங்கள் எழுந்து அசைய, மலர் வனத்தையே அழகர் நகர்த்தி வருவதுபோல் தோன்றும்! முதலில் கூடலழகர் கோயிலை அடைந்து, பிறகு அங்கிருந்து உலா தொடரும்.

டிருக்கிற நம்பிக்கை சார்ந்த விஷயங்களும், வழிபாட்டு முறைகளும் மண் வாசம் மாறாமல் அப்படியேதான் இருக்கின்றன.

சித்திரைத் திருவிழாவை அடிப்படையாகக் கொண்டு நிறைய கிராமங்களில் வியாபாரமும் நடப்பது வழக்கம். ஆடு, மாடுகள் வாங்குவது, விற்பது, நிலம் விற்பது, வாங்குவது என அவ்வருடத்தின் தேவைகளைத் தீர்மானித்தே இதுபோன்ற வியாபாரங்கள் நடக்கும். மீனாக்ஷி சொக்கநாதர் திருமணம் நடைபெறும் முகூர்த்த நேரத்தையும் இவர்கள் அதிகம் கவனிப்பார்கள். அழகர் உடுத்தி வருகிற பட்டின் நிறம், தங்கள் விவசாயத்தின் ஆதாரமாக இருக்கும் என்பது அவர்களின் நம்பிக்கை. பச்சை உடுத்தி வந்தால், பசுமை வளராது, வளம் பெருகும்; வெள்ளை உடுத்தி வந்தால் பயிர் விளைச்சல் அமோகம்; சிவப்பு உடுத்தி வந்தால் மட்டும் அபாயம்! அழகர் பெரும்பாலும் பச்சையோ வெள்ளையோதான் உடுத்தி வருகிறார்!

நிலத்தில் விழுகிற முதல் மழையும், விதைக்கிற முதல் விதையும் அள்ளிப் பெருகி வளம் கொடுத்தால், விளைப்பாட்டில் கொஞ்சத்தை அழகருக்கும், மீனாக்ஷிக்கும் காணிக்கையாய்ச் செலுத்தும் இந்தக் கிராமத்து மனிதர்களின் இறைநம்பிக்கை கலாசாரத்தோடு கலந்து போனது. இவ்வூரின் உயிர்ப்பும், ஜீவனும் ஆயிரமாயிரம் வருடங்களானாலும் மாற்ற முடியாதது. இவையல்லவா நம் தேசத்தின் சொத்து! ○




Samsung India Electronics Pvt Ltd.,

Madurai. Ph:0452-4200290









no.36,மகால் 5வது தெரு மதுரை-1
ph : 98421-32115 , 0452-4370701
E-mail : creative_creativekids@yahoo.co.in





# அழகர் ரூட்!

கண்களை மூடி இரண்டு நிமிடம் யோசியுங்கள். உங்கள் முன்னும் பின்னுமாய்ச் சுற்றிலும் லட்சக்கணக்கில் மக்கள் வெள்ளம். வைகையின் தண்ணீர்கூட மக்கள் கூட்டத்தில் ஸ்தம்பித்துப் போய், கிடைக்கிற இடங்களில் கசிந்து ஓடும். யாரும் தயார்படுத்தாமலேயே கண்கொள்ளா ஓர் அழகு வந்துவிடும் மதுரைக்கு. ஒவ்வொரு வருடமும் திமிறித் தெறிக்கும் கூட்டம், கூடிக் கொண்டே போகுமே ஒழிய ஒருபோதும் குறைந்ததில்லை. தன் தங்கையின் திருமணத்துக்காக கள்ளர் மலையிலிருந்து புறப்படும் கள்ளழகர், மதுரை வந்து சேர்வதற்கு முன்பாகவே முடிந்துவிடுகிறது திருமணம். வைகையின் வடக்குக் கரைக்கு வருபவர், திருமண வைபவத்தில் தன்னைத் தரிசிக்க வந்த பக்தர்கள் வெறுமனே திரும்பிப் போய்விடக் கூடாது என்பதற்காக திருமணம் முடிந்த இரண்டாவது நாளில் வைகையாற்றில் இறங்கி பக்தர்களுக்கு தரிசனம் வழங்குகிறார் என்பது ஐதிகம். அவர் ரூட் எப்படிப் போகிறது...?

- அழகர் மதுரையை அடை



# வெள்ளிக் குதிரையேறி வந்து வளம் கொடுக்கப் போறாரு!

யும் முதல் நாளில், எதிர் சேவை முடிந்து நகருக்குள் பிரவேசம் செய்கிறார்.

● இரண்டாவது நாள் அதிகாலையில் வைகையாற்றில் இறங்கி தரிசனம் தருபவர், மீண்டும் உலாவை வைகையாற்றின் வடக்குக் கரையிலேயே தொடர்கிறார். அன்றைய இரவில் வண்டியூரை சென்றடைபவர் அங்கு தங்குவது, 'நாச்சியாரம்மன்' என்ற இசுலாமியப் பெண்ணின் வீட்டில். கள்ளழகர் மீது அப்பெண்ணுக்கு இருந்த அதீதமான நேசம் காரணமாகத்தான் அழகர் அங்கு தங்கினார் என்பது ஐதிகம்.



* ஆற்றில் இறங்கும் அழகர்

● மூன்றாவது நாள் 'மதிச்சயம்' அடைந்து, அங்கு சர்வ அலங்காரங்களுடன் தசாவதாரக் காட்சி. அன்றிரவு அப்பகுதி முழுக்க திருமாலின் வெவ்வேறு வேஷம் பூசிய பக்தர்களையும் பார்க்க முடியும்.

● தங்கையின் திருமணத்தில் கலந்துகொள்ள முடியாத மனவருத்தத்தில் மலைக்குத் திரும்புகிறவரை சாந்தப்படுத்தவும், அழகுபடுத்தவும் நான்காவது நாள் நடைபெறும் வைபவம் பூப்பல்லக்குத் திருவிழா. மதிச்சயத்திலிருந்து தமுக்கத்தை அடையும்போதே கருப்பணசாமி கோயிலில் எதிர்சேவை முடிந்து சர்வ அலங்காரங்களும் செய்யப்பட்டு தல்லாகுளம் கூடலழகர் பெருமாள் கோயிலை வந்தடைவார். இங்குதான் பூப்பல்லக்குத் திருவிழா சிறப்பாக நடைபெறும்.

● ஐந்தாவது நாள் அங்கிருந்து புறப்பட்டு 'அப்பன் திருப்பதி' என்னுமிடத்தில் 'சேவற்கட்டு' என்கிற வைபவத்தில் உலா வருகிறார்.

● இறுதியாக ஆறாவது நாள் மலைக்குத் திரும்புகிற சுவாமியை, கோயில் வாசலிலேயே வைத்துவிட்டுச் செல்கின்றனர். ஆடித் தீர்த்தம் முடிந்த பிறகு அழகர் மீண்டும் கோயிலில் எழுந்தருளுகிறார்.

தங்கையின் திருமணத்துக்கு கள்ளர் வேடத்தில் கிளம்பி வருகிற அழகர், அத்திருமணத்தில் கலந்துகொள்ள முடியாமல் மனவருத்தத்தோடு திரும்பிப் போகக் கூடாது என பக்தர்களே சீரும் சிறப்புமாக வழியனுப்புகிறார்கள். அழகரோ, தம்மை தரிசிக்க வந்த பக்தர்கள் வருத்தத்துடன் திரும்பக் கூடாது என்பதற்காக, ஆற்றில் இறங்கி ஏறுகிறார்! இப்படி இறைவனுக்கும், பக்தர்களுக்குமான உறவின் பரிமாணத்தைச் சொல்லும் வைபவம் இது! ஒவ்வொரு வருடமும் அவர் ஆற்றில் இறங்குவது, அவ்வாண்டின் சகல கஷ்டங்களும் தீர்ந்து பக்தர்கள் சந்தோஷமாக வாழ வேண்டும் என்பதற்காகத்தான். இதனால்தானோ என்னவோ, சொல்லி வைத்தாற்போல் சித்ரா பௌர்ணமிக்கு இரண்டு நாட்களுக்கு முன்பாகவே மழை பெய்து கொஞ்சமாகவேனும் ஆற்றில் தண்ணீர் ஓடிக்கொண்டிருக்கும்.

இவ்வாண்டோ வைகையின் ஒவ்வொரு பாலத்திலும் குறைவில்லாமல் வழிந்தோடுகிறது தண்ணீர் - 'வந்தாரய்யா எம் மகராசன், வாழவைக்கும் புவியரசன்' என கள்ளழகரை வரவேற்று...



✱ மீனாக்ஷி திருக்கல்யாணம்

மனிதத் திருமணங்களுக்கு தெய்வங்களே சாட்சி. தெய்வத் திருமணங்களுக்கு? யார் சென்று சாட்சி கூற இயலும்? அதனால், பார்வையாளர்களாக வந்து கூடுங்கள். இறைவி - இறைவனின் திருமணக் கோலத்தைக் கண்டுகளியுங்கள். உங்கள் உள்ளங்களில் மகிழ்ச்சி நிறையும். இல்லங்களில் அன்பு ததும்பும் என்று மீனாக்ஷியே அழைக்கிறாள்!

திருக்கோயிலின் வடக்கு ஆடி வீதி மூலையும், மேல ஆடி வீதி மூலையும் இணையும் இடத்தில் மீனாக்ஷி திருக்கல்யாண மண்டபம். சித்திரை மாதத்து சித்திரை நட்சத்திரத்தன்று, இங்கே திருக்கல்யாணம் நடைபெறுகிறது. இத்திருக் கல்யாணத்தைக் காண வேண்டி, திருப்பரங்குன்றம் சுப்பிரமணியர் -



**மதுரை வாய்ஸ்**



**விஜயவள்ளி (இல்லத்தரசி):** எங்களுக்கு அந்தப் பத்து நா
மாதிரி. சைவ - வைணவ இணைப்புத் திருவிழா அது. ஒவ்வொ
அவங்கவங்க உறவுக்காரங்க திருவிழாவைப் பார்க்கறதுக்கு
சித்திரைத் திருவிழா தொடங்கி, முடியற வரைக்கும் அந்த
பெண்கள் டீ.வி.யில சீரியல் பார்க்கிறதை 'சீரியஸா' தள்ளி வெ
முன்னே... டீ.வி. சீரியல் தரிசனம் சித்திரைத் திருவிழாவுக்குப்,
பெண்களின் ஏகோபித்த முடிவு!





தெய்வானை சமேதராக வந்து சேர்கிறார். கல்யாணத்தை நடத்தித் தர, பவளக்கனிவாய்ப் பெருமாளும் அங்கு எழுந்தருளு கிறார். தன் தங்கையாக மீனாக்ஷிக்குத் திருமாங்கல்யம் எடுத்துத் தந்து, அந்த தெய்வீகத் திருமணத்தை நடத்தி வைக்கிறார்.

திருக்கல்யாண மண்டபத்தில் மீனாக்ஷி அம் மனுக்கு, சுந்தரேசுவரர் திருமாங்கல்யம் அணிவிக் கும் அதே நேரத்தில், இரண்டு ஆடி வீதிகளிலும் அமர்ந்திருக்கின்ற இல்லத்தரசிகள் ஒவ்வொரு வரும் தங்களுக்குப் புதிய திருமாங்கல்யக்

# மீனாக்ஷி கல்யாண வைபோகமே!



கயிற்றினை அணிந்துகொள் கின்றனர். ஆண்டுதோறும் மதுரைவாழ் இல்லத்தரசி களிடையே இருந்து வரும் பழக்கம் இது.

கோயிலின் உட்பிராகார ஆடி வீதிகளில், வாழை இலை விரித்து அப்பளம், வடை, பாயாசத்துடன் கல் யாணச் சாப்பாடு. சுமார் ஐம்பதாயிரம் பக்தர்களுக்கு கோயில் வளாகத்தின் உள் ளேயே திருமண விருந்து அளிக்கப்படுகிறது. மீனாக்ஷி-சுந்தரேசுவரருக்கு மொய்ப் பணம் வைக்கும் வழக்கமும் இருந்து வருகிறது. பக்தர்கள் மனமுவந்து வரிசையில் நின்று, அதனைச் செலுத்திவிட்டே கலைந்து செல்கின் றனர்!

*மங்களம் மாதேவருக்கு மாமதுரை வாசருக்கு*
*மண்சுமந்து லீலைசெய்த சொக்கேசர்க்கு*
*மலையத்துவஜராஜன் மகளாய் அவதரித்த*
*மாதேவி மீனாக்ஷிக்கு சுபமங்களம்!*

ம் தீபாவளிக் கொண்டாட்டம்
, வீட்டிலும், வெளியூர்லேர்ந்து
னு வந்து குவிஞ்சிடுவாங்க.
னை நாளுக்குமாக, மதுரைப்
டுவாங்க. 'மீனாக்ஷி தரிசனம்
'னே' என்பதுதான் மதுரைப்



## பள்ளி, கல்லூரி மாணவ, மாணவியருக்கு

# யுவஸ்ரீ கலா பாரதி விருது

மதுரை பாரதி யுவ கேந்திரா சார்பில் இசை, படிப்பு, ஓவியம், சமூகப்பணி, பரதநாட்டியம், பேச்சு, கவிதை, விளையாட்டு ஆகிய துறைகளில் ஏதேனும் ஒரு துறையில் சிறந்து விளங்குகிற L.K.G முதல் 12ம் வகுப்பு வரையிலான மாணவ, மாணவியருக்கு **'யுவஸ்ரீ கலா பாரதி'** என்ற விருதினையும் கல்லூரி மாணவ மாணவியருக்கு **'சுவாமி விவேகானந்தர்'** விருதினையும் ஒவ்வொரு ஆண்டும் மாவட்ட வாரியாக வழங்கி வருகிறோம். ஒவ்வொருவருக்கும் வெள்ளிக்கேடயம் மற்றும் விருதுக்கான பெரிய அளவிலான பட்டயமும், ஸ்படிக மாலையும் வழங்கப்படும்.

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரியில் உள்ள அனைத்து மாவட்டத்தைச் சார்ந்த பள்ளி மாணவ, மாணவியருக்கு இவ்விருது வழங்கும் நிகழ்ச்சி அந்தந்த மாவட்டத்தில் நடைபெற உள்ளது.

ஒவ்வொரு பள்ளியிலிருந்தும் ஒவ்வொரு வகுப்பில் உள்ள அனைத்து பிரிவுகளில் இருந்தும் முதல் 5 ரேங்க் பெற்ற மாணவ மாணவியர் மற்றும் இசை, UC MAS, ABACUS ஓவியம், சமூகப்பணி, பரதநாட்டியம், பேச்சு, கவிதை, அனைத்துவிளையாட்டு, பொது அறிவுத்திறன், யோகா ஆகிய துறைகளில் தகுதியுடைய பள்ளி, கல்லூரி மாணவ மாணவியர் தாங்கள் பெற்ற பரிசுக்கான ஜெராக்ஸ் பிரதிகளின் நகல்களுடன் அடியிற்கண்ட முகவரிக்கு ஒவ்வொருவருக்கும் வீட்டு முகவரி, தொலைபேசி எண்ணுடன் கூடிய ரூ.10 அஞ்சல் தலை ஒட்டப்பட்ட சுய விலாசமிட்ட கவருடன் உடன் அனுப்பிட கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

தேர்வு செய்யப்பட்டவர்களின் விவரம் அவர்களது வீட்டு முகவரிக்கு அனுப்பப்படும். விருது வழங்கும் விழாவில் அவரவருக்கு எடுக்கப்படும் புகைப்படச் செலவை ஒவ்வொருவரும் கண்டிப்பாக ஏற்க வேண்டும்.


நெல்லை பாலு,
நிறுவனர்-பாரதி யுவ கேந்திரா,
G-28, சாந்தி சதன் குடியிருப்பு,
கோச்சடை, மதுரை-625 016.
செல் 94439-30815, 94426 30815.


**யுவஸ்ரீ கலா பாரதி விருதுக்கு தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரியில் உள்ள ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள இசை, பரத நாட்டிய ஆசிரியைகள், ஓவியம், கராத்தே, யோகா மற்றும் UC MAS, ABACUS, HINDI மாஸ்டர்களும் தங்களிடம் பயிலும் சிறப்பானவர்களின் பெயர் பட்டியலையும் அனுப்பலாம். மேலும் கடந்த மூன்று ஆண்டுகளில் 10ம் வகுப்பு மற்றும் +2 பொதுத்தேர்வில் 80% மற்றும் அதற்கு மேலும் மதிப்பெண் பெற்றவர்கள் தங்கள் பெற்ற மதிப்பெண் பட்டியலின் ஜெராக்ஸ் பிரதியுடனும் விண்ணப்பிக்கலாம்**

### கவிதை தொகுப்பு நூல்

பாரதி யுவ கேந்திரா சார்பில் 200 கவிஞர்களின் கவிதைகளைத் தொகுத்து ஒரு கவிதைத் தொகுப்பு நூல் மே மாதத்தில் வெளியிட உள்ளோம். இந்நூலுக்கு கவிஞர்கள் 24 வரிகளுக்குள் மரபு அல்லது புதுக்கவிதை ஒன்று எழுதி எமது மேற்கண்ட முகவரிக்கு அனுப்பலாம். அத்தோடு ரூபாய் 250/- M.O. மூலம் அனுப்பவும். ஒவ்வொருவருக்கும் 5 புத்தகங்கள் அனுப்பிவைக்கப்படும்.



# பாரதி யுவ கேந்திரா ட்ரஸ்ட்

(Regd.)


G28, சாந்தி சதன் குடியிருப்பு, கோச்சடை, மதுரை - 625 016.

Cell : 94439-30815, 94426-30815,


## "யுவஸ்ரீ கலா பாரதி விருது - 2008"

பெயர் :

தந்தை பெயர் :

வகுப்பு :

தற்பொழுது பயிலும்
பள்ளி - கல்லூரி பெயர் :

வீட்டு முகவரி மற்றும்
தொலைபேசி எண் :

அதிகமாக பரிசு
பெற்ற போட்டி :
(ஏதேனும் ஒரு துறையைக்
குறிப்பிடவும்)

தங்களின்
சமீபத்திய
பாஸ்போர்ட்
அளவு
புகைப்படம்
இங்கு ஒட்டவும்

விருது பெறுபவர் கையொப்பம்

தேதி :


குழந்தைகளின் சிறந்த ஆயுர்வேத ஜீரண டானிக்
Celebrating
30
YEAR
INFANTALL
GMP
CERTIFIED PRODUCT
கிரைப் வாட்டருக்கு ஓர் உன்னத மாற்று
இன்பென்டால்
Manufactured by :
GROOSELL Pharmaceutical Manufacturing Company
No. 50, Ramasamy Salai, Sri Devi Karumariamman Nagar, Valasaravakkam, Chennai - 600 087.



சித்திரைத் தேரு ரெண்டுங்க. ஒண்ணு மீனாக்ஷித் தேரு. இன்னொண்ணு சுந்தரேசுவரர் தேரு. சுவாமிக்குப் பெரிய தேரு. அம்மனுக்குச் சின்ன தேரு. அதுபோல ரெண்டு பேருக்குமே வாகனங்கள் வேறு வேறு. இங்கு மீனாக்ஷிதான் மெயின். அரசாட்சி பண்ணுகிறவள் இல்லையா? அதனால எப்பவுமே சுவாமி கூடவே தன்னால இருக்க முடியாதுன்னு, தன்னைப் போலவே இன்னொரு மீனாக்ஷியை உருவாக்கி, சுந்தரேசுவரர் பக்கத்துல உக்காரச் செய்திருக்கிறாள். சுந்தரேசுவரர் கூடவே வர்ற இன்னொரு மீனாக்ஷிக்கு, **பிரியா விடை**ன்னு பேரு!

சுந்தரேசுவரர் சமேத பிரியா விடை அதிகாலை நாலரை மணிக்கே எழுந்தருளி, சுவாமி தேருக்கு வந்து சேர்றாங்க. தனியாக நின்றருளும் அம்பாள் மீனாக்ஷியும் அம்மன் தேருக்கு வந்து சேர்றாங்க. சூரிய உதயத்துக்கு முன்னரே திருத்தேர் வடம் பிடித்து இழுத்து, சிங்கார பவனி துவக்கி வைக்கப்படும். தேர் முட்டியிலிருந்து முதல் தேராக, சுவாமி தேரு கிளம்பும். அடுத்து அரைமணி நேரம் கழிச்ச, மீனாக்ஷி தேரு கிளம்பும். பக்தர்கள் ரெண்டு தேருங்களையும் இழுத்துக்கிட்டுப் போக, போட்டி போட்டு வந்து நிப்பாங்க.

ரெண்டு தேர்களையுமே அத்தினி ஜோரா அலங்காரம் பண்ணியிருப்பாங்க. வலம் வர்ற நாலு மாசி வீதிகள்லயும் ஜனத்திரள் குவிஞ்சிருக்கும். ஒருகட்டத்துல, ரெண்டு தேருமே ஒண்ணு பின்னாடி ஒண்ணு தொடர்ந்து வர்றதைப் பார்க்கறப்போ கூடி நிக்கறவங்க

* மீனாக்ஷி தேர்



# சிங்கார பவனி வர...



✱ சித்திரைத் தேரில் மீனாக்ஷி

பக்திப் பரவசத்துல மூழ்கிடுவாங்க. ஒரு நூறு பேரு 'சோமசுந்தரா'ன்னு சப்தம் போடுவாங்க. அதுக்கு ஒரு ஆயிரம் பேரு 'ஹரஹர மஹாதேவா'ன்னு இணை குரல் தருவாங்க. 'மீனாக்ஷி சுந்தர... ஹரஹர மஹாதேவ! கல்யாண சுந்தர... ஹரஹர மஹாதேவ! கற்பூர சுந்தர... ஹரஹர மஹாதேவ!' போன்ற கோஷங்கள் விண்ணை முட்டும். இந்த கோஷங்களே, திருத்தேர் வடம்பிடித்து இழுப்போரை மேலும் மேலும் உற்சாகப்படுத்திக்கொண்டிருக்கும்.

காலையில பத்து மணிக்கெல்லாம் சுவாமி தேரும் அம்மன் தேரும் நிலைக்கு வந்து நின்னுடும். தேர் மேலே வாகனங்கள்ல அமர்ந்தபடியே, சுவாமியும் அம்மனும் பக்தர்களுக்குக் காட்சி தருவாங்க. தேர் நிலைக்கு வந்து நின்னதுக்கு அப்புறமா, அந்தத் திருத்தேர் வடக்கயிற்றைக் கண்களில் ஒற்றித் தொட்டுக் கும்பிட, ஒரு கூட்டம் அலை மோதி வரும் பாருங்க... காலைலேர்ந்து சாயந்தரம் அஞ்சரை மணி வரைக்கும் கடல் அலை மாதிரி இந்தக் கூட்டம் வந்துக்கிட்டே இருக்கும்!

மாலை ஆறு மணிவாக்கில் சுந்தரேசுவரரும், மீனாக்ஷியும் கீழிறங்கி வந்து, கோயிலுக்குள் பிரவேசிப்பாங்க. அந்தப் பகல்பொழுது முச்சூடும் கோயில் நடை சாத்தப்பட்டிருக்கும்.

## எங்க மீனாக்ஷி சூட்சுமக்காரி!

தேர்த் திருவிழாவுக்கு வருகிற மதுரை பக்கத்து இளவட்டங்களோட மனசுக்குள்ளார ஒரு பாட்டு ஓடிக்கிட்டே இருக்கும். 'தேரு பார்க்க வந்திருக்கும் சித்திரைப் பெண்ணே... உன்னைத் திருடிக்கிட்டுப் போகட்டுமா பத்தினிப் பெண்ணே?'ன்னு. எங்க மீனாக்ஷி ரொம்பவும் சூட்சுமக்காரி. அதெல்லாம் இல்லாமலா அவ அரசாட்சி பண்ணி வர்றா?



ரெண்டு வீட்டார் மனசுக்குள்ளேயும் புகுந்து, அந்த வருஷத்துக்குள்ளாரயே, அந்த இளசுகளை இணைச்சு வெச்சிடுவா. அடுத்த வருஷம் நடக்குற 'மீனாக்ஷி திருக்கல்யாணத்தை' நேர்ல கண்டுகளிக்க அவங்க தம்பதியா வருவாங்க!

# உதிரிப் பூ!

● இவ்வாண்டு ஏப்ரல் 6ஆம் தேதி துவங்கி 20ம் தேதி வரையிலும் மீனாக்ஷி - திருக்கல்யாண உற்சவமும், அதற்குப் பிறகான ஒரு வார காலத்துக்கு கள்ளழகர் ஆற்றில் இறங்கும் வைபவமும் நடக்கின்றன.



* முகூர்த்த மாலை தரும் மாமி!

● திருவிழாக் காலங்களில் மட்டும் இங்கே போடப்படுகிற திடீர்க் கடைகள், பெரும்பாலும் வெளியூர்க்காரர்கள் போடுபவைதான். வியாபாரத்துக்கு மட்டுமல்ல, திருவிழா நாட்களில் இலவச மோர்ப் பந்தல் போடுவது, விசிறிகள் கொடுப்பது என எல்லாவற்றிலும் மதுரைவாசிகளுக்கு நிகராக பிற ஊர்களைச் சேர்ந்தவர்களின் பங்கும் இருக்கும்.

● மீனாக்ஷி, சொக்கநாதர் திருமணம் சைவத்தையும், கள்ளழகர் ஆற்றில் இறங்கும் வைபவம் வைணவத்தையும் அடையாளப்படுத்துகிறது என்றாலும், இவை எந்த விதமான பாகுபாடுமில்லாமல் கொண்டாடப்படுகின்றன.

● மீனாக்ஷி திருக்கல்யாணமும், கள்ளழகர் ஆற்றில் இறங்கும் வைபவமும் தனித்தனியாகக் கொண்டாடப்பட்டு வந்ததை மாற்றி, தமது காலத்தில் இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து சித்திரைத் திருவிழாவாக்கினார் திருமலை நாயக்க மன்னர்.



● கள்ளழகர் மலைக்குத் திரும்புகிற போது நிகழ்கிற முக்கியமான சடங்கான தாமரைத் தொட்டி திருவிழாவானது முழுக்க, முழுக்க சௌராஷ்டிரா மக்களால் நடத்தப்படுவது.

● இந்தத் திருவிழா தினங்கள் முழுக்க இஸ்லாமியர்களின் பங்கு அபரிமிதமானது. இவர்களும் சளைக்காமல் மோர்ப் பந்தல் துவங்கி, பூ மாலைகள் அள்ளிக் கொடுப்பது வரை எல்லாவற்றிலும் பங்கெடுத்துக் கொள்வார்கள்.

● சாய்ந்த கொண்டையுடன் கையில் கிளியேந்தி நிற்கும் அழகி மீனாக்ஷிக்கு முகூர்த்த மாலை, அவளைப் போலவே சாய்ந்த கொண்டை, கிளி ஏந்திய இன்னொரு அழகியிடமிருந்து வருகிறது! ஆம், ஸ்ரீவில்லிபுத்தூரிலிருக்கிற ஆண்டாள் கோயிலிலிருந்துதான் எடுத்து வரப்படுகிறது. ○




# ஆர்.எஸ்.பதி மருந்து நேட்ச்ரோ

## புதிய பொலிவுடன் 60ml Pack

**தலைவலி ★ ஜலதோஷம் ★ ஃப்ளு ★ கைகால்வலி ★ மூட்டுவலி**
**முதுகுவலி ★ சைனஸ் முதலியவைகளுக்கு சிறந்த நிவாரணம்**

தயாரிப்பாளர்கள் : ஆர்.எஸ்.பதி எஸ் அன் கோ. மதுரை - 625 001. ☎ 2342085

## உபயோகிக்கும் முறை


குழந்தைகள் இருமலுக்கு, முதுகெலும்பின் மேலினும், நெஞ்சுக்குழியிலும், மருந்தை அடிக்கடி தேய்ப்பதுடன் தொண்டையின் மேலில் தேய்க்க வேண்டும். நெஞ்சு சளி, இருமல், தொண்டை வலி தீரும். (1 வயதிற்கு மேல்)


தலைவலியிலிருந்து முற்றிலும் விடுபட 3 அல்லது 6 துளிகள் மருந்தை 2 அல்லது 3 முறை நெற்றியில் தேய்க்கவும்.


அதிக தூரம் நடந்ததினாலாவது, கடின வேலையினாலாவது மற்றெந்த காரணத்தி-னாலாவது தேகமுழுமையும் அதிக வலியும், மண்டைக்கனமும் உண்டாகியிருந்தால் வெந்நீரில் மருந்தை விட்டு கலக்கி ஸ்நானம் செய்தால் வலி எல்லாம் தீரும்.


தேகத்தில் அடிப்பட்ட வீக்கம், பொறுக்க முடியாத வலி, மற்றெந்த வீக்கமாய் இருந்தாலும் அரை சீசா வெந்நீரில் கால்புட்டி இந்த மருந்தைவிட்டு குலுக்கி ஒரு துணியில் நனைத்து நோயுள்ள இடத்தில் அடிக்கடி போட்டு வந்தால் முற்றிலும் குணமாகும்.


தேகத்தில் எந்தவிதமான வலிநோய் உண்டானாலும் கை, கால், முழங்கால், இடுப்புவலி, மூட்டுவலிக்கு நோயுள்ள இடத்தில் மருந்தை அடிக்கடி நன்றாய்ச் சூடேறும்படி தேய்க்கவும்.


கத்தியினால் வெட்டுபட்ட காயங்கள் வெந்தபுண்கள், புரையோடிய ஆறாத புண்கள் யாவும் இம்மருந்தைப் போட்டவுடன் சீக்கிரம் குணமாகும்.


வீட்டில் துர்நாற்றமுள்ள இடத்தில் இம்மருந்தை தெளித்தாலும், அல்லது மரத்தூளில் கலந்து தூவி வந்தாலும் அல்லது துணியில் நனைத்து தொங்கவிட்டாலும், கெட்ட நாற்றத்தைப் போக்கி சுத்தம் செய்யும். கொசு, ஈ, பூச்சிகள் முதலியவை இந்த வாசனைப் பட்டால் ஓடிவிடும்.


ஜலதோஷம், மூக்கடைப்பு இவைகட்கு மருந்தை நோயுள்ள இடங்களில் நன்றாய்ச் சூடேறும்படி தேய்க்கவும்.


மூக்கில் சைனசுக்கு இந்த மருந்தை ஒரு துளியும் தேங்காய் எண்ணெய் மூன்று துளியும் கலந்து காலை, மாலை மூக்கில் தடவி வந்தால் நல்ல நிவாரணம் அளிக்கும். மேலும் இந்த மருந்தை சுடுதண்ணீர் பாத்திரத்தில் சில துளிகள் விட்டு போர்வையால் தலையை மூடிய வண்ணம் ஆவி பிடித்தால் சைனஸிலிருந்து நல்ல நிவாரணம் அளிக்கும்.


மூக்கடைப்பிற்கு மூக்கின் மேல் இரண்டு துளிகளை தடவிக் கொள்ளலாம் அல்லது மூக்கடைப்பிற்கு தூங்குவதற்கு முன்பு கைக்குட்டையில் 4 அல்லது 5 சொட்டு R.S. பதி மருந்து நேட்ச்ரோவை விட்டு மூக்கின் அருகில் வைத்து தூங்கினால் மூக்கடைப்பிலிருந்து நல்ல நிவாரணம் கிடைக்கும்.


பாதங்கள் வலிக்கு 1/2 வாளி சுடு தண்ணீரில் தாங்கி கொள்ளும் அளவிற்கு 5 அல்லது 10 துளி R.S. பதி மருந்து நேட்ச்ரோவை விட்டு பாதங்களை 15 நிமிடங்களுக்கு வைத்திருந்தால் பாதங்கள் வலிக்கு நல்ல நிவாரணம் கிடைக்கும்.



* ராஜா

"எங்க கோயில்ல பன்னிரண்டு மாசமும் திருவிழா நடக்கும். அதனால எப்பவுமே எங்களுக்கு அதிகப்படியா வேலைகள் இருந்துக் கிட்டேயிருக்கும். அதுவும் சித்திரைப் பெருவிழா, தைப்பூசத் தெப்பத் திருவிழா, ஆவணி மூல விழா இந்த மூன்றையும் நாங்க 'ராஜாங்கத் திருவிழா'ன்னு சொல்வோம். இந்த மூணுலயுமே முத்தாய்ப்பானது இந்தச் சித்திரைப் பெருவிழாதான்!" என்கிறார் மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் பணியாளர் ஒருவர்.

"மேல ஆடி வீதியில, இந்தியா சிமெண்ட்ஸ் (பெரம்பலூர்) நிறுவனத்தார் பக்தர்களுக்குச் சுத்திகரிக்கப்பட்ட குடிநீர் வழங்கு நிலையம் ஒன்றினைச் செயல்பட வைத்திருக்காங்க..." என்கிறார் திருக்கோயிலின் இணை ஆணையர் ராஜா. கோயிலின் உள்ளே பல இடங்கள்லயும், குடிநீர்த் தொட்டி வசதிகள் செய்து தரப்படுகிறது. மாநகராட்சி துப்புரவுப் பணியாளர்களைக் கொண்டு, அப்பப்ப சுத்தப்படுத்தவும் ஒரு டீம் ரெடியா இருக்கு. காவல் துறையும் கண் துஞ்சாம வேலை செய்யுது. திருக்கல்யாணத்தை, நேர்ல அமர்ந்து பார்க்க வர்ற பக்தர்களோட வசதிக்காக ரெண்டு ஆடி வீதிகள்ல தகரக் கூரைகள் அமைக்கப்பட்டிருக்கு. எல்லோரும் பார்க்க வசதியா, கோயிலில் ஆங்காங்கே ஐம்பத்திரண்டு இடங்கள்ல தொலைக்காட்சிப் பெட்டிகள் வைக்கப்பட்டிருக்கும். மீனாக்ஷி திருக்கல்யாணத்தப்ப மதிய உணவு. ஆடி வீதிகள்ல, பந்திப் பாய் விரிச்சு, வாழை இலை போட்டு கல்யாணச் சாப்பாடு பரிமாறப்பட இருக்கு. சுமார் ஐம்பதாயிரம் பக்தர்கள் அந்தக் கல்யாண விருந்துச் சாப்பாட்டுல கலந்துக்குவாங்க. இதனோட மொத்தச் செலவையும் பழமுதிர்ச்சோலை, முருகன் பக்த சபை செய்யக் காத்திருக்கு! எல்லாத்துலயும் கோயில் நிர்வாகப் பணியாளர்களோட வேலைகளும் கலந்திருக்கு" என்கிறார்.



# SACS -ன் கோடைகால சிறப்பு விற்பனை

## ஏர்கண்டிஷனர்கள், ரெப்ரிஜிரேட்டர்கள் அதிரடி விலைகளில்



TITAN | TIMEX | SONATA | SANYO/BPL | ONIDA | SONY | PHILIPS | LG | SAMSUNG | VIDEOCON
ULTRA | Whirlpool | Godrej | IFB | SOWBAGYA | Preethi | EUREKA FORBES | NOKIA | DVD, Home Theatres

- எக்ஸ்சேஞ்ச் சலுகை*
- 0% வட்டியில் சுலபத்தவணை திட்டம்*
- அனைத்துக் கிரடிட் கார்டுகளும் ஏற்றுக்கொள்ளப்படும்.

*நிபந்தனைக்குட்பட்டது

**SACS**
32, டவுன்ஹால் ரோடு, மதுரை-1. Ph: 2342698, 4370008
3085, கீழ ராஜ வீதி, புதுக்கோட்டை-1. Ph: 221579, 222021

---

**Estd. 1989** ஸ்ரீசந்தா விநாயகர் துணை உ தேவதானப்பட்டி ஸ்ரீ காமாட்சி அம்மன் துணை

காலை காபி, 3 வேளை சைவ உணவு, தங்கும் வசதி, தினசரி ஒரு லிட்டர் மினரல் வாட்டர், Rs. 1 Lakh Travels Insurance உள்பட 3 Tier இரயில் சுற்றுலாக்கள்.

04-05-08 & 09-05-08 & 23-05-08 மற்றும் 15-06-08 முதல் :
டெல்லி–திரிவேணி–காசி–சாரணாத்–வியாசகாசி–கயா–புத்தகயா–கல்கத்தா – 10 நாட்கள் ரூ. 4600
★ இத்துடன் டெல்லி–பூரி–புவனேஸ்வர்–கோனார்க் உள்பட – 11 நாட்கள் ரூ. 4990
★ இத்துடன் ஆக்ரா–மதுரா–அமிர்தசரஸ்–வாகாபார்டர்–ஹரித்துவார்–ரிஷிகேஷ் உள்பட – 14 நாட்கள் ரூ. 6490

11-05-08 & 19-05-08 & 10-06-08 முதல் 13 நாட்கள் மதுரா–ஆக்ரா–பிருந்தாவன்–டெல்லி–ஹரித்துவார்–ரிஷிகேஷ்–**பத்ரிநாத்–கேதார்நாத்** ரூ. 6400
★ இத்துடன் திரிவேணி–காசி–கயா–கல்கத்தா–பூரி–புவனேஸ்வர்–கோனார்க் உள்பட – 17 நாட்கள் ரூ. 8200

04-05-08 & 18-05-08 முதல் 12 நாட்கள் : மதுரா–ஆக்ரா–பிருந்தாவன்
டெல்லி–குருக்ஷேத்திரம்–சண்டிகார்–**சிம்லா–குப்ரி–மணிக்கரன்–குலு–மணாலி**–ரோத்தங்பாஸ்–வசிஷ்டநாத் ரூ. 6590
★ இத்துடன் அமிர்தசரஸ்–வாகாபார்டர்–**ஜம்மு–வைஷ்ணவதேவி** உள்பட 16 நாட்கள் ரூ. 7990

**07-05-08 & 18-05-08 & 10-06-08** முதல் 12 நாட்கள் பூரி–புவனேஸ்வர்–கோனார்க்–கல்கத்தா
சயன்ஸ்சிட்டி–**டார்ஜிலிங்–கேங்டாக்(சிக்கிம்)**–சங்குலேக்–பாபாமந்திர்–மந்தாகினி வாட்டர் பால்ஸ் உள்பட ரூ. 6590

**03-05-08** முதல் 16 நாட்கள் ராஜஸ்தான் – பஞ்சதுவாரகா சுற்றுலா ரூ. 7990

09-05-08 & 23-05-08 முதல் கப்பல் மற்றும் விமானம் மூலம் அந்தமான் சுற்றுலா சைவ உணவு மற்றும் தங்கும் வசதியுடன் ரூ. 4500

அமர்நாத், கைலாஷ், மூனாறு, நேப்பாள், இலங்கை, சிங்கப்பூர், மலேசியா சுற்றுலாக்களுக்கு அணுகவும்

★ 60 நாட்களுக்கு முன் முழுப் பணம் செலுத்துவோருக்கு கட்டணத்தில் 5% சலுகை உண்டு.

அனைத்து சுற்றுலாத்தலங்களுக்கும் சென்றுவர DVD வசதியுடன் கூடிய A/c மற்றும் Non A/c கார், வேன், மினி பஸ் வாடகைக்கு கிடைக்கும்.

L.T.C. ரசீது தரப்படும். | II Tier A/c & III Tier A/c சுற்றுலா உண்டு

## சன் டிராவல்ஸ்

Prop. K. சிதம்பரம், B.Sc., B.Ed.,
செல் : 98421 - 56668

மதுரை : 3, தெற்கு மாசி வீதி, T.M. கோர்ட் (நாகலு காபி எதிரில்) மதுரை – 1. போன் : 2341133
சென்னை : 30, நடேசன் தெரு, (சிவா–விஷ்ணு ஆலயம் அருகில்) T. நகர், சென்னை–17. போன் : 24359194, செல் : 93645-59194
கிண்டபள் : J.B. சுக்கிரசேகர், 31-C, சோன் நகர், சினி பார்க் தியேட்டர் ரோடு, கிருப்பர்–6. செல் : 93446 10317



''கோயிலின் வெளிப் பிராகாரம் சித்திரை வீதிகள். அந்த நான்கு சித்திரை வீதிகளும் தற்போது பொலிவு பெற்றுள்ளன'' என்கிறார் 'கா.ரா.' என அழைக்கப்படும் முருகேசன். இவர் மீனாக்ஷியம்மன் கோயில் அமைந்துள்ள 38வது வட்ட மாமன்ற உறுப்பினர் (தி.மு.க.). ''மத்திய அரசின் ஜவகர் வேலைவாய்ப்புத் திட்டமும், தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகமும் இணைந்து சுமார் மூன்று கோடி ரூபாய் திட்ட மதிப்பீட்டில் பணிகள் நடத்தியுள்ளன. மாநகராட்சி நிர்வாகம் அப்பணிகளைச் செயல்படுத்தியுள்ளது. தற்போது நான்கு சித்திரை வீதிகளிலும் பேவர் பிளாக் எனப்படும் வண்ண வண்ண தரைக்கற்கள் பதிக்கப்பட்டுள்ளன. கோயிலின் மதில் சுவரையொட்டி பூங்காக்கள், கம்பி கேட்டுகளுடன்



**''ஆயிரத்துக்கும் மேற்பட்ட தற்காலிகப் பணியாளர்கள் மாநகராட்சி மூலம் பணியமர்த்தப்படுவர்!''**



* முருகேசன்

# மாநகராட்சியின் மகத்தான பொறுப்பு!



* கௌஸ் பாட்சா

## தொகுதி வளர்ச்சி நிதியில்... கோயில் திருப்பணிகள்!

''தேர்தலில் வெற்றி பெற்ற உடனே இந்து அறநிலையத் துறை அமைச்சரைக் கோயிலுக்கு அழைத்து வந்தேன்'' என்கிறார் மதுரை மத்திய தொகுதி எம்.எல்.ஏ. கௌஸ் பாட்சா.

''தெற்கு கோபுர வாசலிலும், கிழக்கு கோபுர வாசலிலும் சில இடங்களில் விரிசல்கள் ஏற்பட்டிருந்தன. அவற்றைச் செப்பனிட உடனே உத்தரவிட்டார் அமைச்சர். சட்டமன்ற உறுப்பினர் தொகுதி வளர்ச்சி நிதியை, முதன் முதலாக மீனாக்ஷியம்மன் கோயில் திருப்பணிக்குத்தான் வழங்கிட அனுமதி பெற்றுத் தந்தேன். சித்திரை வீதிகளில் பிளாட்பாரங்களில் மார்பிள் கல் பதித்திடவும், ஹைமாஸ் மின்விளக்குகள் அமைக்கவும் அறுபது லட்ச ரூபாய் செலவில் திட்டப் பணிகள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன!'' என்கிறார்.

அமைக்கப்பட்டுள்ளன.

மாநகராட்சி நிர்வாகம் சுகாதாரத் துக்குத்தான் முதலிடம் தந்து வருகிறது. லட்சக்கணக்கான மக்கள் வந்து, தங்கி விட்டுச் செல்கின்ற திருவிழா இது. தற்காலிகக் கழிவறைகள் ஐம்பது இடங்களில் கட்டித் தரப்படுகின்றன. அவ்வப் பொழுது குப்பைகள் அகற் றப்படுகின்றன. இதற் கென ஆயிரத்துக்கும் மேற்பட்ட தற்காலிக துப் புரவுப் பணியாளர்கள், மாநகராட்சி மூலமாக பணிகளில் அமர்த்தப் படுவர்.

வருகிற வெளியூர் பக் தர்களுக்கு, காலரா தடுப் பூசி கண்டிப்பாகப் போடப் படுகிறது. இதற்கென்று மாநகராட்சி சார்பில், ஐம்பது இடங்களில் சுகாதார மருத் துவ மையங்கள் இயங்கும். மீனாக்ஷி திருக்கல்யாணம் காண, அன்று மட்டுமே மூன்று லட்சத் துக்கும் மேற்பட்டவர்கள் கூடுவார்கள். கள்ளழகர் வைகையாற்றில் இறங்கு வதைப் பார்க்க, சுமார் ஐந்து லட்சத்துக்கும் மேற்பட்டவர்கள் வருவார்கள். இத்தனை பேருக்கும் குடிநீர்த் தொட்டிகள் வைக்கப் பட்டிருக்கும். இதெல்லாம் போதாமல், லாரிகளிலும் பக்தர்களுக்குக் குடிநீர் சப்ளை செய்யப்படும்!'' என்கிறார் தி.மு.க. கவுன் ஸிலர் களின் தலைவரான கா.ரா. முரு கேசன். ○

* மாநகராட்சி அமைத்துள்ள பூங்கா



கட்டுரைகள்:

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு, லக்ஷ்மி சரவணகுமார்**

படங்கள் உதவி: **கணேஷ் பாபு மற்றும் கோயில் நிர்வாகம்**

பங்கேற்ற விளம்பரதாரர்களுக்கு மனமார்ந்த நன்றி



## மதுரை வாய்ஸ்

சுந்தரராமன், [பன்னிரு திருமுறை மன்றச் செயலாளர்] :

இது போன்றதொரு இறைவி - இறைவன் பட்டாபிஷேக நிகழ்ச்சி, தமிழகத் திருக்கோயில்களில் வேறு எங்குமே இல்லை. அதுவும் சித்திரைப் பெருவிழாவில் மீனாக்ஷி பட்டாபிஷேகம் என்பது, முக்கியத் திருவிழாவாக ஆண்டுதோறும் நடத்தப்படுகிறது. பெண்மைக்கு முடிசூட்டி, செங்கோல் தந்து பெண்களாலும் அரசாட்சி செய்திட முடியும் என்பதை இந்த உலகுக்கு உணர்த்துவதே மதுரையில் மீனாக்ஷி பட்டாபிஷேகம். பெண்களுக்கு மூன்றில் ஒரு பங்கு இடஒதுக்கீட்டுக்காக, இந்தியப் பாராளுமன்றத்தில் இழுபறி பல்லாண்டுகளாக நீடித்து வருகிறது. அதனை வெகு எளிதாக, எல்லோரும் ஏற்றுக்கொள்ளும் வண்ணம் நமது முன்னோர்கள் புராண காலங்களிலேயே நிகழ்த்திக் காட்டியுள்ளனர்.



* சுந்தரராமன்

மீனாக்ஷிக்கு மங்களம்

வந்தது. ஆனால், சோழ நாட்டின் மேல் அவனுக்கு எவ்வளவு ஆசை இருந்தாலும் சோழ நாட்டு மக்கள் சுதந்திரத்தை மறந்து, வீரமிழந்து பல்லவ சக்கரவர்த்திக்கு உட்பட்டிருப்பதை நினைக்க நினைக்க அவன் வெறுப்படைவதும் உண்டு. அந்த வெறுப்பு, இப்போது சிறையில் இருந்த சமயம் பதின்மடங்கு அதிகமாயிற்று. வீரபார்த்திப மகாராஜாவின் புதல்வன் உள்ளூர்ச் சிறைச்சாலையில் இருப்பதைக்கூடத் தெரிந்துகொள்ளாமல்தானே இந்த ஜனங்கள் இருக்கிறார்கள்.

தாயாரைப் பார்க்கவேண்டுமென்ற ஆசை ஒன்று இருந்தது. அதுவும் நிறைவேறவில்லை. நிறைவேறாமலே சாகப் போகிறோமோ என்னவோ?

அப்புறம், குந்தவி! அவளை நினைக்காமலிருப்பதற்கு விக்கிரமன் ஆனமட்டும் முயன்றான். ஆனால், முடியவில்லை. குந்தவியை நினைத்ததும், விக்கிரமனுக்குப் பளிச்சென்று ஓர் உண்மை புலனாயிற்று. செண்பகத் தீவிலிருந்து கிளம்பி வந்ததற்குப் பல காரணங்களை அவன் கற்பித்துக் கொண்டிருந்தானென்றாலும், உண்மையான காரணம் இப்போது தெரிய வந்தது. குந்தவிதான் அந்தக் காரணம். இரும்பு மிகவும் வலிமை வாய்ந்ததுதான்; ஆனாலும், காந்தத்தின் முன்னால் அதன் சக்தியெல்லாம் குன்றிவிடுகிறது. காந்தம் இழுக்க, இரும்பு ஓடி வருகிறது. குந்தவியின் சந்திரவதனம் – சீ, இல்லை! – அவளுடைய உண்மை அன்பு தன்னுடைய இரும்பு நெஞ்சத்தை இளக்கிவிட்டது. அந்தக் காந்த சக்திதான் தன்னை செண்பகத் தீவி லிருந்து இங்கே இழுத் துக் கொண்டு வந்தது. ஜுரமாகக் கிடந்த தன்னை எடுத்துக் காப்பாற்றியவள் அவள் என்று தெரிந்த பிறகு கூட விக்கிரமனுக்கு குந்தவியின் மேல் கோபம் இருந்தது; தன்னுடைய சுதந்திரப் பிரதிக்ஞையை நிறைவேற்றுவதற்கு அவள் குறுக்கே நிற்பாள் என்ற எண்ணம்தான் காரணம். ஆனால், கடைசி நாள் அவளுடைய பேச்சிலிருந்து அது தவறு என்று தெரிந்தது. 'இவரை மன்னிக்கும்படி நான் என் தந்தையிடம் கேட்கமாட்டேன்; ஆனால், மரண தண்டனையை நிறைவேற்றுவதற்கு முன்னால் இவரை மணம் புரிந்துகொள்ள அனுமதி கேட்பேன்' என்று எவ்வளவு கம்பீரமாய்க் கூறினாள்! இத்தகைய பெண்ணின் காதலை அறிவதற்காக, செண்பகத் தீவிலிருந்துதானா வரலாம்? சொர்க்கலோகத்திலிருந்துகூட வரலாமல்லவா? ஆகா! இந்த மாரப்பன் மட்டும் வந்து குறுக்கிட்டிராவிட்டால், குந்தவியும் தானும் வருகிற அமாவாசையன்று கப்பலேறி, செண்பகத் தீவுக்குக் கிளம்பியிருக்கலாமே!

**அ**மாவாசை நெருங்க நெருங்க, விக்கிரமனுடைய உள்ளக் கிளர்ச்சி அதிகமாயிற்று. அமாவாசையன்று செண்பகத் தீவின் கப்பல் மாமல்லபுரம் துறைமுகத்துக்கு வரும். அப்புறம் இரண்டு நாட்கள் தன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும். எப்படியாவது இச்சிறையிலிருந்து தப்பி அமாவாசையன்று மாமல்லபுரம் போகக் கூடுமானால்!

இவ்விதம், விக்கிரமன் எண்ணாததெல்லாம் எண்ணினான். ஒவ்வொரு நிமிஷமும் அவனுக்கு ஒரு யுகமாயிருந்தது. கடைசியில் அமாவாசைக்கு முதல் நாள் மாலை மாரப்ப பூபதி வந்தான். விக்கிரமனைப் பார்த்து நகைத்துக்கொண்டே, "ஓ! இரத்தின வியாபாரியாரே! காஞ்சியிலிருந்து கட்டளை வந்துவிட்டது" என்றான்.

ஒரு கணம் விக்கிரமன் நடுங்கிப் போனான். கட்டளை என்றதும், மரண தண்டனை என்று அவன் எண்ணினான்.

மரணத்துக்கு அவன் பயந்தவனல்ல என்றாலும், கொலையாளிகளின் கத்திக்கு இரையாவதை அவன் அருவருத்தான்.

ஆனால், மாரப்பன், "காஞ்சிக்கு உன்னைப் பத்திரமாய் அனுப்பி வைக்கும்படி கட்டளை. இன்றிரவு இரண்டாம் ஜாமத்தில் கிளம்ப வேண்டும், சித்தமாயிரு" என்றதும், விக்கிரமனுக்கு உற்சாகம் பிறந்தது. வழியில் தப்புவதற்கு எத்தனையோ சந்தர்ப்பங்கள் நேரிடலாமல்லவா? அல்லது போராடி வீரமரணமாவது அடையலாமல்லவா? இது இரண்டும் சாத்தியமில்லாவிட்டால், சக்கரவர்த்தியின் முன்னிலையில் இன்னொரு தடவை, 'அடிமை வாழ்வை ஒப்புக்கொள்ளமாட்டேன்; சுதந்திரத்துக்காக உயிரை விடுவேன்' என்று சொல்வதற்காவது ஒரு சந்தர்ப்பம் ஏற்படலாமல்லவா? ஆகா! குந்தவியும் பக்கத்தில் இருக்கும்போது இம்மாதிரி மறுமொழி சொல்வதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால் அதைவிடப் பெரிய பாக்கியம் வேறு என்ன இருக்க முடியும்?

## 33. அமாவாசை முன்னிரவு

அன்றிரவு ஒரு ஜாமம் ஆனதும் சிறைச்சாலைக் கதவு திறந்தது. மாரப்பனும் ஆயுதம் தரித்த வீரர்கள் சிலரும் வந்தார்கள். விக்கிரமனுடைய கைகளைச் சங்கிலியால் பிணைத்து வெளியே அழைத்துச் சென்றார்கள். வாசலில் கட்டை வண்டி ஒன்று ஆயத்தமாய் நின்றது. அதில் விக்கிரமன் ஏறிக்கொண்டான். அவனுக்கு முன்னும் பின்னும் வண்டியில் சில வீரர்கள் ஏறிக்கொண்டார்கள். அவ்விதமே வண்டிக்கு முன்னாலும் பின்னாலும் சிலர் நின்றார்கள்.

சிறைவாசலில் மாரப்பன் அந்த வீரர்களின் தலைவனாகத் தோன்றியவனைக் கூப்பிட்டு, அவன் காதோடு ஏதோ இரகசியமாகச் சொன்னான். பிறகு உரத்த குரலில், "கிளம்பலாம்!" என்றான்.

உடனே வண்டிக்காரன் வண்டியை ஓட்ட, முன்னாலும் பின்னாலும் நின்ற வீரர்களும் போகத் தொடங்கினார்கள்.

உறையூர் வீதிகளின் வழியாக வண்டி போய்க்கொண்டிருந்தது. முன்னெல்லாம் போல் இப்போது இரவில் விளக்குகள் எரியாமல் இருளடைந்துகிடப்பதைப் பார்த்ததும், விக்கிரமனுக்கு என்னவோ செய்தது. ஆகா! சோழ நாட்டுத் தலைநகரமான உறையூர்தானா இது?

"ஏனுங்க சாமிங்

"இப்பவே இந்த நிமிஷமே ஊரைவிட்டு ஓடிடலாம் போலிருக்கு கண்ணே!"

"சே! என் பிறந்த நாளாச்சேனு எங்கம்மா இவ்வளவு நகையையும் போட்டுத் தொலைச்சிருக்கக் கூடாது!"

- உ.ராஜாஜி



களே! இந்தப் பிள்ளையாண்டான் யாரு? இவனை எங்கே அழைத்துப் போறீங்க?'' என்ற பேச்சைக் கேட்ட விக்கிரமன் திடுக்கிட்டான். பேசியவன் வண்டிக்காரன்தான். ஆனால், அந்தக் குரல் பொன்னன் குரலாக அல்லவா இருக்கிறது! அப்படியும் இருக்க முடியுமா?

வீரர்களில் ஒருவன், ''உனக்கு ஏன் அப்பா இந்த வம்பு? பேசாமல் வண்டியை ஓட்டு!'' என்றான். அதற்கு வண்டிக்காரன், ''எனக்கு ஒன்றுமில்லை, அப்பா! ஆனால், ஊரெல்லாம் பேசிக்கிட்டிருக்காங்க, யாரோ செண்பகத் தீவிலிருந்து வந்த ஒற்றனாம்! சக்கரவர்த்தி மகள் குந்தவி தேவியையே ஏமாற்றிவிட்டானாம். அப்பேர்ப்பட்டவனை நம்ம சேனாதிபதி கண்டுபிடித்து விட்டாராம். அப்படியெல்லாம் ஊரிலே பேச்சாயிருக்கே, அவன்தானா இவன் என்று கேட்டேன்'' என்றான்.

''ஆமாம். அவன்தான் என்று வைத்துக் கொள்ளேன்'' என்றான் ஒரு வீரன்.

''எங்கே அழைத்துக்கொண்டு போறீங்களோ?'' என்று வண்டிக்காரன் கேட்க, ''எங்கே அழைத்துக்கொண்டு போவாங்க? காஞ்சிமா நகருக்குத்தான்'' என்று மறுமொழி வந்தது.

''அடே அப்பா! அவ்வளவு தூரமா போக வேண்டும்? நீங்கள் ஏழெட்டுப் பேர் காவலுக்குப் போறீங்களே, போதுமா? வழியிலே இவனுக்கு யாராவது ஒத்தாசை செய்து தப்பிச்சுவிட்டு விட்டாங்கன்னா, என்ன செய்வீங்க?'' என்றான் வண்டிக்காரன்.

பேசுகிறவன் உண்மையில் பொன்னன் தானோ? தனக்குத்தான் சமிக்ஞை செய்தி தெரிவிக்கிறானோ? வழியில் வந்து ஒத்தாசை செய்வதாகக் கூறுகிறானோ? இவ்விதம் விக்கிரமன் வியப்புடன் எண்ணமிட்டுக் கொண்டிருக்கும்போது, சற்றுப் பின்னால் வந்த வீரர் தலைவன், ''யார் அங்கே? என்ன பேச்சு?'' என்று அதட்டவே மௌனம் குடி கொண்டது. பிறகு வண்டிக்காரனாவது வீரர்களாவது பேசவில்லை.

காவேரிக் கரைக்கு வந்ததும் வண்டி நின்றது. விக்கிரமனும் வண்டியிலிருந்த வீரர்களும் இறங்கினார்கள். ஆற்றங்கரையோரமாக ஒரு படகு ஆயத்தமாயிருந்தது. அங்கே ஒருவன் கையில் தீவர்த்தியுடன் நின்றுகொண்டிருந்தான்.

எல்லோரும் கீழிறங்கியதும் வண்டிக்காரன் வண்டியைத் திருப்பிக்கொண்டே, ''போயிட்டு வர்றீங்களா? ஒற்றனை ஜாக்கிரதையாகக் கொண்டு போய்ச் சக்கரவர்த்தியிடம் சேருங்கள், ஐயா! வழியில் ஒரு



''நம் நால்வகைப் படையைப் பார்த்து, எந்த எதிரிப் படையும் பயப்படுவதில்லையே அமைச்சரே!''

''பேசாமல் ஒரு 'பாம்பு'ப் படையை உருவாக்குவோம் மன்னா, பாம்பென்றால் படை நடுங்கித்தானே ஆகவேண்டும்.''

- வெ.சீதாராமன்





''அமைச்சரே, போரில் நாம் தோற்றுவிடுவோம் என மக்கள் இட்டுக்கட்டிப் பேசிக் கொள்கிறார்களாமே?''

''ஆம் மன்னா! கூடவே பெரும் தொகையை 'பெட்'டுக்கட்டியும் பேசிக் கொள்கிறார்கள்!''

- வீ.விஷ்ணுகுமார்



காட்டாறு இருக்கிறது. பத்திரம்!'' என்றான். அப்போது தீவர்த்தி வெளிச்சம் அவன் முகத்தின் மேல் அடித்தது. விக்கிரமனுக்கு அந்த முகத்தைப் பார்த்ததும் பெரும் ஏமாற்றமுண்டாயிற்று. ஏனெனில், அவன் பொன்னன் இல்லை. ஆனால், அவனுடைய கண்களில் அந்த ஒளி – எங்கேயோ பார்த்த முகமாயிருக்கிறதே? – சட்டென்று உண்மை புலனாயிற்று. பொன்னன்தான் அவன். முகத்தில் பொய் மீசை வைத்துக் கட்டிக்கொண்டிருக்கிறான். அவன் கூறிய வார்த்தைகளின் பொருள் என்ன? வழியில் காட்டாற்றின் சமீபத்தில் தன்னை விடுவிக்க வருவதாகத்தான் சொல்லியிருக்க வேண்டும். இந்த எண்ணத்தினால் விக்கிரமனுக்கு மிகுந்த உற்சாகம் உண்டாயிற்று.

படகில் ஏறி ஆற்றைக் கடந்தபின் அவர்கள் நடுஜாமம் வரையில் கால்நடையாகப் பிரயாணம் செய்தார்கள். பிறகு சாலையோரம் இருந்த ஒரு மண்டபத்தில் படுத்துத் தூங்கினார்கள்.

மீண்டும் அதிகாலையில் எழுந்து மாட்டு வண்டி பிடித்துக்கொண்டு பிரயாணமானார்கள். அன்று பொழுது சாயும் சமயத்தில் பராந்தகபுரத்தைத் தாண்டினார்கள்.

இனிச் சிறிது தூரத்தில் காட்டாறு வந்துவிடும் என்று விக்கிரமன் ஒருவாறு தெரிந்துகொண்டிருந்தான். அந்த வண்டிக்காரன் பொன்னனாயிருக்கும் பட்சத்தில், இங்கேதான் தனக்கு உதவி வரவேண்டும். 'யார் வருவார்கள்; எப்போது வருவார்கள்?' என்றெல்லாம் எண்ணி விக்கிரமனுடைய உள்ளம் பரபரப்பை அடைந்தது.

அஸ்தமித்து இரண்டு நாழிகை இருக்கும். அந்த அமாவாசை இருட்டில் சாலையில் ஜனநடமாட்டம் அதிகமாயிருந்ததைக் கண்டு விக்கிரமன் வியந்தான். ஆங்காங்கு சிறுசிறு கும்பலாக ஜனங்கள் போய்க் கொண்டிருந்தார்கள். கோயிலுக்குப் போகிறவர்களைப் போல் அவர்கள் காணப்பட்டார்கள். வெறிபிடித்தவர்களைப் போல் ஆடிக் கொண்டும் பாடிக்கொண்டும் போனார்கள். சிலர் மஞ்சள் வஸ்திரம் அணிந்துகொண்டிருந்தார்கள். ஒவ்வொரு கும்பலிலும் ஒருவன் தீவர்த்தி பிடித்துக் கொண்டிருந்தான். இன்னும் இந்தக் கும்பல்களில் சிலர் நீண்ட கத்திகளை எடுத்துச் சென்றது விக்கிரமனுக்கு ஒருவாறு பயங்கரத்தையளித்தது. இவர்களெல்லாம் எங்கே போகிறார்கள்? கையில் கத்திகளை என்னத்துக்குக் கொண்டு போகிறார்கள்?

இந்தக் காட்சிகளைப் பார்த்த மாரப்பனுடைய வீரர்கள் தங்களுக்குள் இரகசியமாகப் பேசிக் கொண்டதில் சில

வார்த்தைகள் விக்கிரமனுடைய காதிலும் விழுந்தன. 'பத்திரகாளி' 'நரபலி', 'கபால பைரவர்' என்னும் சொற்கள் அவனுக்குத் திகைப்பையும் பயத்தையும் உண்டாக்கின. மகேந்திர மண்டபத்தின் வாசலில், மகா கபால பைரவரும், மாரப்பனும் பேசிக் கொண்டது அவனுக்கு நினைவு வந்தது. ஓஹோ! இன்றைக்கு அமாவாசை இரவல்லவா? மாரப்பன் ஒருவேளை தன்னைக் காஞ்சிக்கு அனுப்புவதாகச் சொல்லி உண்மையில் கபால

**"மகாராஜா ஏறுங்கள் குதிரை மேல்; ஒரு கணமும் தாமதிப்பதற்கில்லை" என்றான் பொன்னன்.**



பைரவனின் பலிக்குத்தான் அனுப்பியிருப்பானோ! இவ்விதம் அவன் எண்ணிக் கொண்டிருக்கும்போதே ''ஓம் காளி! ஜய காளி!'' என்ற பல குரல்களின் ஏகோபித்த கோஷம் அவன் காதில் விழுந்தது, மயிர்க்கூச்சு உண்டாக்கிற்று. அவ்விதம் கோஷித்தவர்கள் அடுத்த நிமிஷம் விக்கிரமன் இருந்த வண்டியைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்கள் கையில் நீண்ட கூரிய கத்திகள் நட்சத்திர வெளிச்சத்தில் மின்னியது தெரிந்தது. ''ஓம் காளி, ஜய காளி'' என்ற கோஷங்களுக்கு மத்தியில், ''எங்கே பலி?'' என்று ஒரு பயங்கரமான குரல் கேட்டது.

இதற்குள் வண்டிக்கு முன்னாலும் பின்னாலும் வந்த உறையூர் வீரர்கள் ஒரே ஓட்டமாய் ஓடிவிட்டார்கள். வண்டியில் இருந்தவர்களும் தொப்புத் தொப்பென்று குதித்து ஓட்டம் பிடித்தார்கள். வண்டிக்காரன் அந்தர்த்தானமாகி விட்டான். விக்கிரமன் கைகள் சங்கிலிகளால் வண்டியின் சட்டத்துடன் பிணைக்கப்பட்டிருந்தமையால், அவனால் மட்டும் வண்டியிலிருந்து குதிக்க முடியவில்லை. அப்போது வண்டியின் பின்புறத்தில் ஒரு குரல், ''மகாராஜா! பதற வேண்டாம்! நான்தான்'' என்றது. உடனே பொன்னன் வண்டியில் ஏறிச் சங்கிலிகளை அவிழ்த்தெறிந்தான். விக்கிரமன் வண்டியிலிருந்து குதித்ததும், இரண்டு உயர்ஜாதிக் குதிரைகள் சித்தமாய் நிற்பதைக் கண்டான். ''மகாராஜா! ஏறுங்கள் குதிரை மேல்; ஒரு கணமும் தாமதிப்பதற்கில்லை!'' என்றான் பொன்னன்.

(தொடரும்)

'இதோ வருகிறார், அதோ வந்து விட்டார்' என்று சிரஞ்சீவியின் அரசியல் பிரவேசத்தை, ஆவல் பொங்க எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது ஆந்திரா. முக்கியமாக சிரஞ்சீவியின் ரசிகர்கள். 'வரவே மாட்டேன்' என்று தடாலடியாகச் சொல்லாமல், 'வருவேன், ஆனால், இப்போதைக்கு இல்லை' என்று பொடி வைத்துப் பேசியிருந்ததால் எதிர்பார்ப்பு நாளுக்கு நாள் எகிறி, தற்போது அது உச்சகட்டத்தை எட்டியுள்ளது!

அதுவும் எப்படி? தி.மு.க.வின் சின்னமான உதயசூரியனை, தம்முடைய கட்சிக்கு ஒதுக்குமாறு தேர்தல் கமிஷனை அணுகி, பரபரப்பு வெடியைப் பற்ற வைத்திருக்கிறார்

# சின்னம், சிக்கல், சிரஞ்சீவி!

சிரஞ்சீவி!

பதறிப்போய்விட்டது தேர்தல் ஆணையம். புதிதாகத் தொடங்கும் கட்சி, பழைய கட்சி ஒன்றின் அதிகாரபூர்வ சின்னத்தைக் கேட்டால், உடனடியாகப் பழைய கட்சியிடம் கருத்துக் கேட்பது நடைமுறை. அதன்படி நேராக தி.மு.க. தலைமையிடம் விஷயத்தைக் கொண்டுபோனது.

விஷயம் கேள்விப்பட்டதும் தி.மு.க.வுக்கு அதிர்ச்சியும் ஆத்திரமும் ஒரு சேர வந்துவிட்டதுபோல! உடனடியாகத் தன்னுடைய எதிர்ப்பைப் பதிவு செய்துவிட்டது.

தமிழகம் மட்டும் அல்லாமல் ஆந்திரா, கர்நாடகா, கேரளா, அந்தமான், மகாராஷ்ட்ரா உள்ளிட்ட பல மாநிலங்களில் தி.மு.க.வுக்குக் கிளைகள் இருக்கின்றன. அங்கெல்லாம் தி.மு.க. ஓரளவுக்கு வலுவாக இயங்கிக் கொண்டிருக்கிறது என்பதால், சிரஞ்சீவி தங்களுடைய சின்னத்தைக் கைப்பற்ற முயல்வது சரியல்ல என்பது அந்த எதிர்ப்பின் சாரம்.

ஆனால், 'உதய சூரியன் எங்களுடைய முதல் சாய்ஸ் அல்ல' என்று கூறியிருக்கிறார் சிரஞ்சீவி. ஆந்திராவில் நிலவும் லஞ்ச – லாவண்யங்களுக்கும் ஊழலுக்கும் எதிராக மூன்றாவது கண்ணைத் திறக்க வேண்டும் என்ற எண்ணத்தில் 'கண்' சின்னத்தையே விரும்பிக் கேட்டதாகவும், ஆனால், தேர்தல் ஆணையத்தின் விதிமுறைகளின்படி, அது சாத்தியமில்லாது போகவே உதயசூரியனைக் கேட்டதாகவும் கூறியுள்ளது சிரஞ்சீவி தரப்பு.





● சிரஞ்சீவி

தவிரவும், 'நேர்மறைச் சின்னமாக இருப்பதாலேயே உதயசூரியனை விரும்புகிறோம். நிச்சயம் உதயசூரியன் எங்களுக்கு வேண்டும்; கிடைக்கும்' என்றும் கூறியுள்ளனர்! கட்சிக்கு அனுமதி பெறவும் சிரஞ்சீவியின் சகோதரர் அல்லு அரவிந்த் மும்முரமாக முயன்று வருகிறார்.

சின்னம் கேட்பதிலேயே தேசிய கவனத்தை ஈர்த்திருக்கிறார் சிரஞ்சீவி. அவர் அரசியலுக்கு வருவதை வரவேற்பதாகச் சமீபத்தில் விஜயகாந்த் வேறு பேட்டி கொடுத்திருந்தார். இந்தச் சூழ்நிலையில் உதயசூரியன் சின்னத்தின் புகழைப் பகிர்ந்து கொள்வதையோ, தாரை வார்ப்பதையோ தி.மு.க., 'சின்ன'ப் பிரச்னையாகப் பார்க்காது; நிச்சயம் இது பெரிய பிரச்னைதான்!

– கலை

# சமஸ்கிருதம் படித்தால் சூப்பர் சம்பளம்!


* ராமச்சந்திரன்

சமீபத்தில் தீபிகா பெல்லாரிசிங் என்ற மாணவியை ஜே.பி.குழுமம் என்ற வெளிநாட்டு நிறுவனம் கேம்பஸ் இன்டர்வியூ மூலம் வேலைக்கு எடுத்துள்ளது. சம்பளம் 7.20 இலட்சம்! கேட்க மலைப்பாக இருக்கிறதா! புதுதில்லியிலுள்ள செயின்ட் ஸ்டீஃபன்ஸ் கல்லூரியில் சமஸ்கிருத மொழியில் மேற்படிப்பு படித்துக்கொண்டிருந்தவருக்குத்தான் இந்த அதிர்ஷ்டம் அடித்திருக்கிறது. சமஸ்கிருதம் படித்தவருக்கு எந்த அடிப்படையில் இந்த வேலை வாய்ப்பு என்று யோசிக்கிறீர்களா? அதுவும் வர்த்தகத்துறை சம்பந்தப்பட்ட ஓர் அலுவலகத்தில்! சமஸ்கிருதம் படித்திருந்ததால்தான் இந்த வாய்ப்பாம். எந்த விஷயத்தையும் எளிதில் புரிந்துகொள்ளவும், திறம்பட செயல்படவும், தலைமைப் பொறுப்பை ஏற்கவும், பிரச்னையை வெற்றிகரமாக எதிர்கொள்ளவும் சமஸ்கிருதம் படித்தவர்களால் மட்டுமே முடியும் என்று அந்த நிறுவனம் கருதியதால் இந்த வேலைவாய்ப்பு.



சமஸ்கிருதம், படிப்பதற்கு மிகவும் கடினமானது; பிற மொழிகளைக் கல்ப்படமாக்கிச் சிதைக்கிறது என்று சிலர் முணுமுணுத்துக்கொண்டிருக்கும் வேளையில், இது குறித்து சமஸ்கிருத சமிதியின் செயலர் டாக்டர் ராமச்சந்திரனிடம், கேட்டோம்.

''தமிழ்நாட்டில் மட்டும்தான் சமஸ்கிருதம் அலட்சியப்படுத்தப்பட்டு வருகிறது. உலக நாடுகளில் சமஸ்கிருதம் உயர் படிப்புக்காக வைக்கத் தொடங்கிவிட்டார்கள். நாங்கள் கூலித் தொழிலாளி குழந்தைக்குக்கூட சமஸ்கிருதம் சொல்லிக் கொடுக்கிறோம். சமீபத்தில் பேசவே முடியாத குழந்தைக்கு சமஸ்கிருதம் சொல்லிக் கொடுத்து, டாக்டர்கள் வெற்றி கண்டிருக்கிறார்கள். பகவத் கீதையோ, மகாபாரதமோ, பிரம்மசூத்திரமோ அல்லது அர்த்த சாஸ்திரமோ எதைப் படித்தாலும் அதில் வாழ்க்கை இருக்கிறது. பிரச்னையை எதிர்கொள்வதற்கான பல நுணுக்கமான விஷயங்கள் இருக்கின்றன. யார் சமஸ்கிருதம் படித்தாலும் நல்ல எதிர்காலம் இருக்கிறது'' என்கிறார் டாக்டர் ராமச்சந்திரன்.

– ஷிவா

# படுதலம் சுகுமாரன்

**ஒரு பக்கத் தொடர் 15**



# புள்ளிகள்... கோலங்கள்...

''ஆனால், நாம் சூழ்நிலைக் கைதிகள் அம்மா. நம் தேவைகள் எல்லாவற்றையும் நிறைவேத்திக்கற உரிமையும், வசதியும் இருந்தாலும்கூட சில காரணங்களுக்காக, சிலவற்றை நாம இழக்கணும், மறக்கணும்...! அது நம்ம கடமை. நான் என்ன சொல்ல வர்றேன்னு உனக்குப் புரியும்னு நினைக்கிறேன். மனத்தைத் திடப்படுத்திக்கோ. நாளைக்கு உன்னைப் பெண் பார்க்க வர்றாங்க...''

கலேகாவின் முகத்தில் அதிர்ச்சி அப்பட்டமாகத் தெரிந்தது.

''ப்பா...பூபதி நல்லவர்ப்பா...''

தயங்கித் தயங்கி... மெதுவாகச் சொன்னாள். பொன்ராஜ் சட்டென்று மறுத்தார். ''தப்பு, வாய்ப்பு கொடுத்த, வாழ்க்கை கொடுத்த முதலாளிக்குத் துரோகம் செஞ்சவன், செய்யறவன், நல்லவனாயிருக்க முடியாது. முதலாளி மகளை கிளப்புக்குக் கூட்டிக்கிட்டுப் போய் நாலுபேர் அறிய கூத்தடிக்கிறவன் ஃப்ராடும்மா...''

அவர் குரலில் கடுங்கோபம் வழிந்தது.

''போ... எல்லாம் மறந்துட்டு, தூங்கி, காலைல நல்ல பெண்ணாய் எழுந்திரு...போ...!'' என்று புறங்கையை அசைத்தார் பொன்ராஜ்.

**பா**ட்டியின் மடியில் விழுந்து, குமுறிக் குமுறி அழுதாள் கலேகா.

''அம்மா கலேகா, அழாத. இதப் பாரு! எழுந்திரு, கண்ணைத் துடை...''

''செத்துரலாம்னு இருக்கு பாட்டி. அப்பா இப்படித் திடீர்னு முடிவெடுப்பார்னு நினைக்கல. தப்பு என்பேர்லதான் பாட்டி. நான்தான் பூபதியை பார்ட்டிக்கு அழைச்சுக்கிட்டுப் போனேன். விலகி விலகிப் போனவரைத் துரத்தித் துரத்தி நான்தான் பாட்டி காதலிச்சேன். அவரைப் பத்தி மோசமான இமேஜ் எப்படியோ அப்பாவுக்கு ஏற்பட்டிருச்சி. நாளைக்கே பெண் பார்க்க வர்றாங்களாம்.''

''ஆரம்பத்திலேயே இதை நீ என்கிட்ட சொல்லியிருந்தால், நான் உங்க அப்பாகிட்ட பக்குவமா எடுத்துச் சொல்லியிருப்பேன். இப்ப என்ன... உன்னைப் பொண்ணு பார்க்கதான வரப் போறாங்க. தாலி கட்ட வரலியே! இப்போதைக்கு உங்கப்பா சொல்றாப்ல நட. மத்தத நான் பேசிக்கறேன்...'' என்று பேத்தியை ஆறுதல்படுத்தி அனுப்பிய தாயம்மா, சுவரில் படமாகச் சிரித்துக் கொண்டிருந்த கணவனின் முகத்தைப் பார்த்தாள்.

''தெளிஞ்ச நீரோடை போல குடும்பம் போய்க்கிட்டிருந்ததே...! இப்ப அபஸ்வரமா தட்டுதே! சிக்கலை நீங்கதான் சரி பண்ணணும்...'' என்று வேண்டிக்கொண்டாள்.

(தொடரும்)

* ஸ்டெயின்




# இன்னொரு மெக்ராத்

கபில்தேவின் அஞ்சா நெஞ்சம் பற்றி இனி புதிதாகச் சொல்ல வேண்டியதில்லை. பி.சி.சி.ஐக்கு எதிராக ஐ.சி.எல். அமைப்பை ஆரம்பித்த நாள் முதலே இன்னொரு ஜென்மம் எடுத்து, புதிதாக வாழ்ந்து கொண்டிருக்கிறார் கபில்தேவ். பி.சி.சி.ஐ. என்கிற பணமுதலையோடு போரிட்டு வீரமரணம் அடையப்போகிறார் என்றுதான் எல்லோரும் கபில்தேவைப் பார்த்து உச்சுக் கொட்டினார்கள். ஆனால், சமீபத்தில் நடந்து முடிந்த ஐ.சி.எல். போட்டிவரை நாளுக்கு நாள் ஐ.சி.எல்.வின் வெற்றி பெரியதாகிக்கொண்டே இருக்கிறது. பார்வையாளர்கள் எண்ணிக்கை கூடிக்கொண்டே இருக்கிறது. பார்வையாளர்கள் ஐ.சி.எல்., ஐ.பி.எல். என்றெல்லாம் பேதம் பார்ப்பதில்லை. 'சுவாரசியமான கிரிக்கெட்டை யார் கொடுத்தால் என்ன' என்கிற மனோநிலையில் அவர்கள் இருக்கிறார்கள். இருப்பினும், கபில்தேவுக்கு நேர்ந்த சின்னச் சறுக்கல் - இதுவரைக்கும் ஐ.சி.எல். கண்டுபிடிப்பு என்று ஓர் இந்திய வீரரைக்கூட சுட்டிக் காட்ட முடியவில்லை.

ஐ.பி.எல். ஜுரத்தில் இருக்கும் இந்திய வீரர்களை தெ.ஆ. தொடரில் ஆடவைத்தது பிழையோ என்று எண்ணும்படிச் செய்துவிட்டார்கள். மொத்த அணியும் ஏதாவது ஒரு சாக்குச் சொல்லி நொண்டிக்கொண்டிருக்கிறது. டெண்டுல்கருக்கு இரண்டு வாரம் ஓய்வு அவசியம் என்கிற கண்டிப்பை மீறி, சென்னை டெஸ்டில் ஆடவந்தார். பெரிய முட்டை ஒன்றைரன்னாக எடுத்தார். ஃபீல்டிங் செய்ய வேண்டிய சமயத்தில்கூட பெரும்பாலும் குளிரூட்டப்பட்ட அறையில் ஓய்வெடுத்துக்கொண்டிருந்தார். ஷகீர்கான், இஷாந்த் சர்மா இல்லாமல் போனால் இந்திய வேகப்பந்து வீச்சின் டப்பா, டான்ஸ் ஆடிவிடும் என்பது இப்போது கண்கூடாகத் தெரிந்துவிட்டது. ஆட்டம் நடக்காத நாட்களில் கிரிக்கெட்டையே மறந்து போனார்கள் இந்திய வீரர்கள். கேமரா முன்பு நின்று ஐ.பி.எல்.லுக்காகக் குட்டிக்கரணம் அடிக்கக்கூடத் தயாராக இருந்தார்கள். ஆனால், எதிரணி இந்த விஷயத்தில் மிகவும் உஷாராக இருந்தது. தெ.ஆ. வீரர்களும் ஐ.பி.எல். அணிகளில் நீக்கமற நிறைந்திருந்தாலும் அவர்களு

டைய முழுக்கவனமும் டெஸ்ட் தொடரின் மீதே இருந்தது. பலன் கைமேல் கிடைத்தது. கிரிக்கெட் நுகர்பொருள் ஆகிவிட்ட பிறகு, இந்தச் சோதனைகளையெல்லாம் இந்திய ரசிகர்கள் சந்திக்கத்தான் வேண்டும்.

எப்போதும் பாகிஸ்தான் வாரியத்துடன் மல்லுக்கட்டுவதால் ஷோயிப் அக்தருக்கு ஐந்து வருடம் தடை விதிக்கப்பட்டது. அதாவது, 'இதோடு உன் கதை முடிந்தது' என்று சொல்லாமல் சொல்லியிருக்கிறது பாகிஸ்தான் கிரிக்கெட் வாரியம். உத்தரவு பிறப்பிக்கப்பட்டவுடன் கிரிக்கெட் உலகமே சிறிது ஸ்தம்பித்தது. ஷோயிப் அக்தரின் நிறைவு விழா இப்படி நடக்கும் என்று யார்தான் எதிர்பார்த்தார்கள். மேலும் ஷோயிப் பற்றி எல்லோருக்கும்தான் எத்தனைவிதமான கருத்துகள் உள்ளன! இப்போது ஐ.பி.எல்.லில் ஆடவும் அவருக்குத் தடைவிதிக்கப்பட்டிருக்கிறது. கமென்டரி பாக்ஸில் அமர வைப்பார்களா என்பதுகூட சந்தேகம். ஆட்டத்தைத் தவிர, இதர விஷயங்களில் மூக்கை நுழைத்தால் என்ன கதியாகும் என்பதை ஷோயிப் வாழ்க்கையிலிருந்து கற்றுக்கொள்ளலாம்.

இன்றைக்கு தென் ஆப்பிரிக்காவில் டேல் ஸ்டெயினைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடுகிறார்கள். வந்த வேகத்தில் நூறு விக்கெட்டுகளை வீழ்த்திவிட்டார் இந்த அசகாய வீரர். கண்ணிமைக்கும் நேரத்தில் இவரது பந்து ஸ்டம்பைப் பதம் பார்ப்பதை ரசிக்க, நீங்கள் தென் ஆப்பிரிக்க ரசிகராகவோ அல்லது நடுநிலைமையாளராகவோ இருக்க வேண்டும். ஆனால், ஸ்டெயினுடைய ஆரம்ப வாழ்க்கை அவ்வளவு ருசியாக அமையாததுதான் ஆச்சர்யம்.

முதலில் இங்கிலாந்துடன் மூன்று டெஸ்டுகள் ஆடியபோது, இப்போது ஆர்.பி.சிங் பந்துவீசுகிற மாதிரி சோதாவாக வீசியிருக்கிறார் ஸ்டெயின். நன்றி தம்பி என்று, அடுத்த நாளே வீட்டுக்கு அனுப்பியிருக்கிறார்கள். வெறுத்துப்போய் இங்கிலாந்து கவுன்ட்டியில் ஆடச் சென்றார். அங்கும் இவரது பந்தை ஆளாளுக்கு பவுண்டரிக்கு விளாச, தென் ஆப்பிரிக்கா திரும்பி ஒரு வெறியோடு உள்ளூர் போட்டிகளில் பந்துவீசியிருக்கிறார். பலனாக, நியூசிலாந்துடனான டெஸ்ட் தொடருக்கு மறுபடியும் அழைக்கப்பட்டார் ஸ்டெயின். அன்று முதல், உண்ண நேரம் இல்லாமல் உழைத்துக்கொண்டிருக்கிறார். இளைப்பாறுவதற்கு எங்கு சென்றாலும் கூடவே காதலியையும் அழைத்துச் செல்வதால், வேண்டிய பக்கபலம் கிடைத்துவிடுகிறது. நம் கண்முன்னே இன்னொரு மெக்ராத் உருவாகிக்கொண்டிருக்கிறார்!



ச.ந.கண்ணன்

# உலகே மாயம்!

# ஒல்லிக்குச்சியும்...

## நாய்கள் ஜாக்கிரதை!

ஜப்பான் நாட்டின் நாஜா நகரில் ஒரு நாய்தான் இப்போது 'டாக் ஆஃப் தி சிட்டி'. புத்தமத துறவியான ஜோர்ய் யோசுகுனி வளர்த்துவரும் ஒன்றரை வயது கோனன் என்கிற நாய், அவரைப் போலவே சாமி கும்பிடுகிறதாம். கைகளுக்குப் பதிலாக முன்னங்கால்களைத் தூக்கி வணங்குகிறதாம்.

பிரார்த்தனையின்போது துறவியின் கூடவே இருக்கும் நாய், மிகச் சில நாட்களிலேயே அவரை அப்படியே பின்பற்ற ஆரம்பித்திருக்கிறது. இப்போது துறவி அந்த நாய்க்குத் தியானம் செய்வதற்கான பயிற்சியை அளித்துவருகிறார்! தினமும் அவர் தம் செல்ல நாயை அருகிலேயே அமரவைத்துத்தான் தியானம் செய்வாராம். அதைப் பார்த்து நாயும் வித்தை காட்ட ஆரம்பித்துவிட்டது. ஆனால், மனிதர்களைப் போல் கால்களைக் குறுக்காக மடக்கி உட்கார அதற்கு விருப்பமில்லையாம்.

நம்மூரிலே பக்கத்திலே தம் செல்ல நாயை வைத்துக் கொண்டு அசட்டுத்தனங்கள் செய்பவர்கள் உஷாராக இருக்க வேண்டும். இல்லையென்றால் அப்படியே நம்மை 'இமிடேட்' செய்தாலும் செய்யலாம்.

## பழரசத்தை நம்பி...

ஆண்களும் பெண்களும் குண்டு குண்டாக அலைந்து திரியும் அமெரிக்காவில், ஹாலிவுட் நடிகைகள் மட்டும் ஒல்லிக்குச்சி உடம்புக்காரிகளாக இருப்பது எப்படி?

இதற்கு ஒரே பதில். பாவம் அவர்கள், ரொம்ப ரொம்பக் கஷ்டப்படுகிறார்கள்! என்ன புரியவில்லையா?

சமீபத்தில் நியூயார்க் நகரில் பிரபலமான 'ரோபு' ரெஸ்ட்டாரன்ட்டுக்குச் சென்றிருக்கிறார் ஹாலிவுட் நடிகை பாரிஸ் ஹில்டன். 'ரெட் புல்'லும் மினரல் வாட்டரும் ஆர்டர் செய்தவர், அதே இடத்தில் இரண்டு மணி நேரம் உட்



### வாசனை திலகம்!

காப்பீடு முறையை உலகுக்கு அறிமுகப்படுத்திய லண்டன் நகரில் நடக்கும் கூத்துகள் வெகுபிரபலம்.

ஃப்ரெட் ஆஸ்டேர் என்ற அந்தக் கால பிரபுதேவாவின் கால்களுக்கும், கெய்த் ரிச்சர்ட்டின் கைகளுக்கும் ஒரு காலத்தில் இன்ஷூரன்ஸ் வழங்கப் பட்டிருக்கிறது.

இப்போது ஒருவரின் மூக்குக்கு, பிரபல லாயிட்ஸ் நிறுவனம் காப்பீடு அளித்துள்ளது.

ஒயின்களைத் தயாரித்து விற்கும்



அவர் எதிரில் உட்கார்ந்திருந்தவர் சூப்பர் ஸ்லிம் நடிகை மார்சியா கிராஸ். அவர் கொஞ்சம் பரவாயில்லை. தண்ணீருக்குப் பதில் ஜூஸ் வாங்கிக் குடித்திருக்கிறார்.

ஹாலிவுட் நடிகைகள் பலரும் இப்படி பழரசத்தை நம்பித்தான் கலைச்சேவை செய்துகொண்டிருக்கிறார்கள்.

ரெனி ஸீவ்வகர், மேரி கேட் ஓல்சன் இருவரும் கடுங் கறுப்புக் காஃபியை மட்டும் நம்பியிருக்கிறார்கள். இவர்களோடு 'ஜிம்'மே கதியென்று கிடக்கும் ஜெஸிகா சிம்சன், டைஸ் ட்லூக் போன்ற நடிகைகளும் இருக்கிறார்கள்.

காத்ரீன் ஹெய்ல் கண்டு பிடித்திருக்கும் புதுவழி, இடைவெளியின்றி புகைத்துக் கொண்டே இருப்பது (முத்தக் காட்சியில் நடிக்கும் நடிகர் பாவம்தான்!).

கார்ந்திருந்தாராம். ஆனால், ரெட் புல்லைத் தொடவே இல்லை. அவ்வப்போது தண்ணீரை ஊற்றி, தொண்டையை நனைத்துக் கொண்டதோடு சரி.

# ...மூக்கழகனும்!

இல்ஜா கோர்ட் என்பவருக்குத்தான் அந்தப் பெருமை கிடைத்திருக்கிறது.



இல்ஜா கோர்ட் ஆயிரக்கணக்கான வாசனைகளைத் துல்லியமாக உணரும் ஆற்றல் உள்ளவராம். 'ஒயினின் தரத்தை வாசனையைக் கொண்டுதான் அளவிட முடியும். எனவே அவருக்கு காப்பீடு அவசியம்தான்' என்று விளக்கம் கொடுத்திருக்கிறது லாயிட்ஸ் நிறுவனம்.

அமெரிக்க காமெடி நடிகர் ஜிம்மி டுரென்டேவின் மூக்கும்கூட இன்ஷூரன்ஸ் செய்யப்பட்டதுதான்.

– ஸாந்த்

23

ரஜினி ரூட்




திரையுலகின் கமர்ஷியல் டிரெண்டுக்கு ஏற்ப எடுக்கப்பட்ட முழுநீள ஆக்ஷன் படம் 'பாயும்புலி'.

அப்பாவி ரஜினியின் தங்கை இந்திரா, ஒரு கம்பெனியில் வேலை செய்வார். அந்த கம்பெனியின் முதலாளி மற்றும் அவரது கூட்டாளிகளுடைய வில்லத்தன நடவடிக்கைகள் ரஜினியின் தங்கைக்குத் தெரிந்துவிடும். உடனே, வில்லன்களான முதலாளியும் அவரது கூட்டாளிகளும், 'இந்தப் பெண் நம்மைப் பற்றி வெளியில் ஏதாவது சொல்லிவிட்டால், நமக்கு ஆபத்து' என்று அவரைக் கொல்லத் தீர்மானிப்பார்கள். அவரை ஓடஓட விரட்டிக் கொண்டு வரும் வில்லன்களுடைய காரில் அடிபட்டு, ரஜினியின் காலில் வந்து விழுவார் இந்திரா. பாசமான தன் தங்கையைக் கொன்ற வில்லன்களிடம் சண்டைக்குப் போவார் ரஜினி. ஆனால், அவர்கள் ரஜினியை பலமாகத் தாக்கி, கடற்கரையில் வீசிவிட்டுப் போய்விடுவார்கள். கராத்தே குருவான பாலாஜியால் காப்பாற்றப்பட்டு, அவரது ஆதரவில் கராத்தே பயிற்சி பெற்று

# சண்டைக்குப்

வில்லன்களை எப்படிப் பழி வாங்குகிறார் ரஜினி என்பதுதான் கதை. அப்பாவியான ஒரு மனிதன்கூட, ஆர்வம், விடாமுயற்சி, தன்னம்பிக்கை ஆகியவற்றின் மூலமாக கராத்தே கலையைக் கற்றுக்கொண்டு வாழ்க்கையில் தன்னுடைய லட்சியத்தை நிறைவேற்றலாம் என்று உணர்த்தியது. ரஜினி நடிக்கும் ஒரு ஆக்ஷன் படம் என்பதால் சண்டைப் பயிற்சியாளர் ஜூடோ ரத்தினம் எப்படியெல்லாம் வித்தியாசமான சண்டைக் காட்சிகளை அமைக்கலாம்? என்னென்ன வித்தியாசமான ஆயுதங்களை ஒவ்வொரு சண்டைக் காட்சியிலும் பயன்படுத்தலாம் என்று தமது நீண்ட கால அனுபவத்தை வைத்து சண்டைக்காட்சிகளை வடிவமைத்தார். அந்தக் காலத்தில், புரட்சித் தலைவர்



**எஸ்.பி.முத்துராமன்**

# போன ரஜினி!

எம்.ஜி.ஆர். தம் படங்களில் சண்டைக்காட்சிகளைப் பிரத்யேக கவனம் செலுத்தி எடுப்பார். அதைப்போல, 'பாயும் புலி' படத்திலும், ஒவ்வொரு சண்டைக் காட்சியும் ஒவ்வொரு வகை; எந்தக் கோணத்திலிருந்து படம் பிடித்தால் பிரமாதமாக இருக்கும் என்று சிந்தித்து, ஒரு ஷாட் விடாமல் படம் பிடித்தோம். ஆகவே, அத்தனை சண்டைக் காட்சிகளிலும் சூடு பறக்கும்; ரசிகர்கள் மத்தியில் விசிலும், கைத்தட்டலும், கூக்குரலுமாக தியேட்டர் சும்மா அதிர்ந்தது.

புகழ் பெற்ற கராத்தே மாஸ்டரான கராத்தே மணி, முதலில் இப்படத்தில் நடிக்கச் சம்மதித்தார். ஆனால், படப்பிடிப்பு ஆரம்பிக்கும் முன்பாக அவர் கழன்று கொண்டார். வேறு யாரை நடிக்க வைப்பது என்று யோசித்தோம். ஜெய்சங்கரை வில்லனாக நடிக்க வைக்கலாமே என்று, அவரை அழைத்துப் பேசினார் சரவணன் சார். விஷயத்தைச் சொன்னதும், சிரித்தபடியே தமது சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து நீட்டினார் ஜெய். அதில் 'கராத்தே மணி நடிக்காததால், அந்த ரோலில் நான் நடிக்க முடியுமா? என்று கேட்பதற்காக ஏவி.எம்.மில் கூப்பிட்டிருக்கிறார்கள். நான் நடிக்கிறேன்' என்று ஜெய்சங்கர் எழுதி வைத்திருந்தார். எங்களுக்கு மகிழ்ச்சி.

**'பா**யும்புலி' படத்தில் 'பொத்துக்கிட்டு ஊத்துதடி வானம்' என்று ஓர் இனிமையான பாடல். சரவணன் சார், தாம் பார்த்த ஜப்பானியப் படம் ஒன்றில், மழைத்துளிகளை வித்தியாசமாகப் படமாக்கி இருந்ததைப் பற்றி மிகவும் சிலாகித்துக் கூறி, 'பொத்துக்கிட்டு ஊத்துதடி' பாடலை அதுபோல படமாக்கினால் புதுமையாக இருக்கும் என்று கூறினார். கேமராமேன் பாபுவிடம் அதைச் சொல்லவும், அவர், ''சார்... ஸ்லோமோஷனில், டாப் ஆங்கிளிலிருந்து படம் பிடித்தால் தான் அப்படி வரும்'' என்றார். அதுபோலவே அந்தப் பாடல் காட்சியை எடுத்துக் கொடுத்தார். பாடலும், காட்சியும் சூப்பர் ஹிட். இன்றைக்கும் மக்களால் நினைவுகூரப்படும் அந்த ஒளிப்பதிவு கண்களுக்கு விருந்து.



* 'பாயும்புலி' படத்தில்

'பாயும் புலி' படத்தில் நிறைய

வித்தியாசமான சண்டைக் காட்சிகள் ஆரம்பத்திலிருந்தே இடம்பெற்றதால், கிளைமாக்ஸ் காட்சியை எப்படி விறுவிறுப்பும் பரபரப்பும் உள்ளதாக மாற்றி, ரசிகர்களை சீட்டின் நுனிக்கு 'வரவழைப்பது என்று சிந்தித்தோம். வில்லன்கள் கதாநாயகி ராதாவையும், சில்க் ஸ்மிதாவையும் மலைப் பகுதிக்குக் கடத்திக் கொண்டு போய்விடுகிறார்கள். அந்த மலைப் பகுதியில், கற்களை மேலே ஏற்றிச் செல்ல நிறுவப்பட்ட ஒரு திறந்த லிஃப்ட். அந்த லிஃப்டில் ராதாவும் சில்க் ஸ்மிதாவும் ஏறித் தப்பித்துச் செல்லும்போது, பாதியில் அந்த



● சில்க் ஸ்மிதா

லிஃப்ட் நின்றுவிட, மாட்டிக் கொள்வார்கள். வில்லனின் ஆட்கள் இரும்புக் கயிற்றை வெட்டி, லிஃப்ட்டை கீழே விழச் செய்ய முயற்சி செய்வார்கள். அவர்களுடன் சண்டை போட்டு ரஜினி அந்தப் பெண்களை மீட்பதுதான் கிளைமாக்ஸ்.

பயப்படுவது போல நடிக்க வேண்டிய ராதா, நிஜமாகவே பயந்து நடுங்கி, அழாத குறை. சில்க் ஸ்மிதாவோ ராதாவைப் பார்த்து சிரித்துக்கொண்டே, அவரைச் சீண்டும் விதமாக, 'எப்படியும் ஒரு நாள் எல்லாரும் சாகத்தானே போறோம்! அது இன்னைக்கு இங்கே நடந்துவிட்டுப் போகட்டும்; அதற்காக ஏன் நீ நடுங்கறே?' என்று சொல்லி பலமாகச் சிரித்தார். அதைக் கேட்ட ராதா மேலும் பதற்றமடைந்தார்!

நாங்கள் கீழே இருந்து மைக் மூலமாக, ''பயப்படவே வேண்டாம்; நீங்கள் தொங்குகிற லிஃப்ட் மூன்று பலமான கம்பிகளால் கட்டப்பட்டிருக்கிறது'' என்று தைரியம் சொன்னோம். 'எப்படியும் ஒரு நாள் எல்லாரும் சாகத்தானே போறோம்!' என்று அன்றைக்கு சொன்ன சில்க் ஸ்மிதா, பின்னர் ஒரு நாள் தற்கொலை செய்து கொண்டு இறந்தபோது, எனக்கு இந்தச் சம்பவம்தான் நினைவுக்கு வந்தது.

1983ல் இங்கே, 'பாயும்புலி' படம் வெளியாகி பெரிய அளவில் வெற்றி பெற்றது. அதன் பிறகுகூட எப்போது தியேட்டரில் அந்தப் படம் திரையிடப்பட்டாலும் நல்ல வசூலைக் கொடுக்கிறது

**"சில்க் ஸ்மிதா பின்னர் ஒரு நாள் தற்கொலை செய்துகொண்டு இறந்தபோது, எனக்கு இந்தச் சம்பவம்தான் நினைவுக்கு வந்தது."**

என்று சரவணன் சார் சொல்வார்.

ரஜினியை வைத்து புயல்போலப் பாயும்புலியை எடுத்த நாங்கள், தென்றல் போல ஒரு மென்மையான காதல் கதையை - கவிதையை எடுத்தோம். அது அடுத்த வாரம்.

(பயணம் தொடரும்)

எழுத்து வடிவம்: **எஸ்.சந்திரமௌலி**

# வெள்ளையர்களுக்கு ஒரு சர்க்குலர்!

'தேர்தல் முடிவுகளை வெளியிட மாட்டேன்' என்று அடம்பிடிக்கிறார் ஜிம்பாப்வே அதிபர் ராபர்ட் முகாபே. 'கணக்கு உதைக்கிறதாம். மீண்டும் எண்ணச் சொல்லியிருக்கிறேன். சரியான முடிவு வரும்வரை அனைவரும் அமைதியாகக் காத்திருங்கள்' என்கிறார் முகாபே.

எதிர்க்கட்சிகள் வானத்துக்கும் பூமிக்குமாக எகிறிக் குதித்துக்கொண்டிருக்கின்றன. இப்படியும் யாராவது செய்வார்களா? ஒரு ஜனநாயக தேசத்தில் இப்படியா தேர்தல் நடத்துவார்கள்? முடிவு எப்படி அமைந்தாலும் அதை வெளியிடுவதுதானே மரபு. முகாபே என்ன எதிர்பார்க்கிறார்? அவருக்கு அதிக வோட்டுகள் கிடைக்கும்வரை மீண்டும் மீண்டும் எண்ணச் சொல்வாரா?




**1980**ல் ஜிம்பாப்வே பிரிட்டனிடமிருந்து விடுதலை பெற்றது. அன்று தொடங்கி முகாபே தான் அங்கே அதிபர். முகாபேயின் ஜிம்பாப்வே ஆப்பிரிக்க தேசிய ஐக்கியம் ஒன்றுதான் சர்வ வல்லமையும் மிக்க ஒரே ஆளுங்கட்சி. சுருக்கமாக, ZANU. ஆரம்பம் முதலே முகாபே ஓர் அதிரடி அதிபர்தான். ஜிம்பாப்வே தேசத்து மக்களின் முழுமையான ஆதரவும் அரவணைப்பும் இவருக்கு இருந்தன. 'கொடியை உயர்த்து' என்று இவர் கட்டளையிட்டால் கொடியை உயர்த்தினார்கள். 'உயிரைவிடு' என்று இவர் உச்சஸ்தாயியில் கத்தினால், இதோ என்று பாய்ந்து முன்னால் வந்தார்கள் இளைஞர்கள்!

முகாபேவைப் போல், கம்பீரமும் வலிமையும் படிப்பாற்றலும் மிக்க மற்றொரு தலைவரை ஜிம்பாப்வே மக்கள் அறிந்திருக்கவில்லை. ஆகவே, ஜிம்பாப்வே மக்கள் முகாபேவைப் பயன்படுத்திக் கொண்டார்கள் - முகாபே, தம் மக்களைப் பயன்படுத்திக் கொண்டதைப் போலவே. 'நான் உங்களுக்கு வளமான வாழ்வாதாரம் கிடைக்கப் பண்ணுவேன். பதிலுக்கு நீங்கள் என்னைப் பதவியில் நீடிக்கச் செய்யுங்கள்.'



முகாபே, கொண்டுவந்த நிலச்சீர்திருத்தங்கள் மிக மிக அதிரடியானவை. ஜிம்பாப்வே முழுவதும் சிதறிக்கிடந்த வெள்ளையர்களுக்கு ஒரு சர்க்குலர் அனுப்பினார். 'உங்களிடம் உள்ள நிலங்களை அரசாங்கத்திடம் ஒப்படைத்துவிடுங்கள். நஷ்ட ஈடு போல் ஏதாவது தருகிறோம். வாங்கிக்கொண்டு ஊர் போய்ச் சேருங்கள்.' பிரிட்டன்வாசிகள் இதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. உடனே முகாபே ஆட்கள் அனுப்பினார். பலவந்தமாக நிலங்கள் மீட்டெடுக்கப்பட்டன.

மக்களே நிலங்களை எடுத்துக் கொள்ளட்டும் என்று முகாபே வழங்கியிருந்தால், மக்கள் அவரைக் கொண்டாடியிருப்பார்கள். முகாபே தடுமாறினார். ஆட்சிப் பொறுப்பில் இருந்த பெரும்புள்ளிகளிடம் நிலம் போய்ச் சேர்ந்தது. மக்கள் துவண்டு போனார்கள். ராபர்ட் முகாபே ஓர் ஊழல்வாதியாகவும் அறியப்பட ஆரம்பித்தார்!

இந்த நிலையில்தான் தற்போது பதவியை விட்டுத்தர மறுக்கிறார் முகாபே.

மருதன்

# டிஜிட்டல் கேண்டீன் - 2

தினசரிப் பத்திரிகை நிருபர் என்ன செய்ய வேண்டும்? செய்தி சேகரித்து வர வேண்டும். செய்தி இல்லாவிட்டால்? ரொம்ப சிம்பிள். செய்தியை உருவாக்க வேண்டும்! கார்டியன் பத்திரிகை நிருபர் ஸ்டீவ் தேர்ந்தெடுத்தது இரண்டாவது வழிமுறையை. இந்த வெள்ளைக்கார நாரதரின் கலகமும் நன்மையில் முடிந்தது.

ஸ்டீவ் இரண்டு வருடங்களுக்கு முன், லண்டன் ஹீத்ரு ஏர்போர்ட் வாசலில் குப்பைக் கூடையைச் சும்மா எட்டிப் பார்க்க, ஒரு குட்டிக் காகிதம் கண்ணில் பட்டது. விமானத்தில் ஏறுவதற்கு முன் எந்த வரிசை, எந்த இருக்கையில் உட்கார வேண்டும் என்பது குறித்து, ஒவ்வொரு பயணிக்கும் கையில் கொடுக்கும் போர்டிங் பாஸின் மிச்சம் மீதியை யாரோ ஒருவர் குப்பைத் தொட்டியில் கடாசிவிட்டுப் போயிருக்கிறார். அது ஸ்டீவ் கையில் மாட்டியது.

பிரிட்டிஷ் ஏர்வேஸ் விமானக் கம்பெனி வழங்கிய அந்த போர்டிங் பாஸில், 'அடிக்கடி பறக்கும் பயணி' என்று குறிப்பிட்டு ஒரு நம்பரைக் குறித்திருந்தார்கள். விமானக் கம்பெனியில் தகவல் பரப்பில் இப்படியான வாடிக்கையாளர்கள் பற்றி, இந்த நம்பர் சகிதம் கணிசமான விவரம் பதிந்து வைத்திருப்பது வாடிக்கை. அதே நம்பரைக் குறிப்பிட்டு, ஒரு பயணச் சீட்டை பிரிட்டிஷ் ஏர்வேஸ் கவுண்டரில் வாங்கிய ஸ்டீவ், கம்ப்யூட்டர் ஜித்தனான தம் நண்பர் ஒருவரின் ஒத்தாசையோடு பிரிட்டிஷ் ஏர்வேஸ் தகவல் பரப்பிலும் தொடர்ந்து அங்கிருந்து கிடைத்த துப்பு மூலம் இதர நிறுவனங்களிடமிருந்தும் தேடித் துருவ, கொட்டு கொட்டென்று தகவல் மழை! அந்த அப்பாவிப் பயணியின் பெயர், வயது, தொலைபேசி எண், வங்கிக் கணக்கு, கிரெடிட் கார்ட் எண் இப்படியான விஷயங்களோடு, அவருடைய வீடு இன்றைய தேதிக்கு எவ்வளவு விலைபோகும் என்பது முதற்கொண்டு விவரம் நிருபர் கையில் வந்தடைந்தது.

'என்னய்யா கம்ப்யூட்டர் சிஸ்டம் வைச்சிருக்கே? ரகசியத்தை ரகசியமா வைக்காம ஊருக்கே காட்டறியே' என்று



## ஏறெவப்பேச்சு

பிரிட்டிஷ் ஏர்வேஸையும் ஒரு வாங்கு வாங்கினார் கார்டியன் கட்டுரையில், ஸ்டீவ். விளைவு? லட்சக் கணக்கில் பணம் செலவழித்து உடனடியாக ஓட்டையை அடைத்தது விமானக் கம்பெனி.

இப்படி ஒரு நபர் பற்றிய தகவல்களை அவருக்குத் தெரியாமல், நைசாக உருவுவதும் அதை வைத்து மோசடி செய்வதும் 'ஐடெண்டிட்டி தெஃப்ட்' எனப்படும். அதாவது 'அடையாளத் திருட்டு'. தீவிரவாதிகளின் இன்டர்நேஷனல் நடமாட்டம் மிகுந்த இந்தக் காலத்தில், தகவல் திருட்டுக்கு முக்கிய வழிமுறை பாஸ்

அவ்வை சண்முகியில்,
அப்பா வாடை பிடித்து
குழந்தை அடையாளம்
காண்பது போல,
ஒவ்வொருவருக்கும்
சுபாவமான வாடையை
சில்லில் பதியப்போகிறார்கள்!



# போலி கைரேகை

இரா. முருகன்

போர்ட்தான். ஒருவரின் பாஸ்போர்ட்டைத் திருடி, புகைப்படத்தை மட்டும் மாற்றி, பயன்படுத்துவது, பாஸ்போர்ட்டை புத்தி சாலித்தனமாக நகலெடுத்து உபயோகிப்பது என்று இந்தத் தொல்லை காரணமாக, அமெரிக்காவில் பாஸ்போர்ட்டில் சில்லுப் பதித்து வெளியிட ஆரம்பித்தார்கள். ரேடியோ ப்ரீக்வென்சி என்ற நுண்ணலைகள் மூலம் அடையாளம் காணும் இந்த ஆர்.எப்.ஐ.டி சிப்பில், பாஸ்போர்ட் உரிமையாளர் பற்றிய விவரங்களோடு அவர் கைரேகையும் பதிவாகி இருக்கும். பாஸ்போர்ட்டைப் பிரித்து, ஆர்.எப்.ஐ.டி ஸ்கேனர் என்ற வருடி முன்னால் வெகு நெருக்கமாக (அதாவது இரண்டே சென்டிமீட்டர்) வைத்தால் அந்த ஸ்கேனர் பாஸ்போர்ட் சில்லைக் குசலம் விசாரித்து, தகவல் தரும். ஸ்கேனர் பாஸ்போர்ட்டோடு 'பேசி' சில்லுத் தகவலைப் பெற ஒரு பாஸ்வேர்ட் தேவை. இங்கிலாந்தில் இப்படியான முப்பது லட்சம் பாஸ்போர்ட்கள் வழங்கிய போது அதில் அச்சடித்த எண், உரிமையாளரின் பிறந்த தேதி போன்ற விவரங்களிலிருந்தே கடவுச் சொல்லை உருவாக்க 'புத்திசாலித்தனமாக' ப்ரோகிராம் செய்து வைத்தார்கள். கடவை உடைத்துச் சில்லு ரகசியத்தை அம்பலப்படுத்தும் வழிமுறை பற்றி ஸ்டீவ் இன்னொரு கட்டுரை எழுதினார்! கைரேகையைக்கூடப் போலியாக உருவாக்க முடியும் என்கிறார் அவர்.

கைரேகையைவிட நம்பிக்கையாக ஆளை அடையாளம் காண, தற்கால அறிவியல் தீவிரமாக யோசித்து வரும் தொழில்நுட்பம், பாடி ஓடர் பயோமெட்ரிக்ஸ். அதாவது வாடை பிடிப்பது! 'அவ்வை சண்முகி'யில் அப்பா வாடை பிடித்து குழந்தை அடையாளம் காண்பது போல, ஒவ்வொருவருக்கும் சுபாவமான வாடையைச் சில்லில் பதியப் போகிறார்கள்!



செல்கிறது.
மூக்கையும் கண்களையும் 'நேஸோலாக்ரிமல் டக்ட்' (Nasolacrymal duct) என்ற குழாய் இணைக்கிறது. கண்ணில் சொட்டு மருந்து விடும்போது, அதுவும் இந்தக் குழாய் வழியாகத்தான் தொண்டைக்குள் இறங்குகிறது. இந்தக் குழாயில் அடைப்பு ஏற்பட்டால் அது ஒருவித நோய். அப்போது அந்தத் திரவம் மூக்கு அல்லது கண் வழியாக வெளியேறும்.

அழுதா கண்ணீர் கண் வழியே முகத்தில் வழியுமே தவிர, கண்ணுக்குள் இயல்பாய்ச் சுரக்கும் திரவம் தொண்டைக்குத்தான் செல்லும். மேலே குறிப்பிட்ட இணைப்பு குழாய் குறுகலானது.

# கண்ணீர்

● கண்ணில் சொட்டு மருந்தை விடும்போது கொஞ்ச நேரத்தில் அது தொண்டைக்குள் இறங்கும் உணர்வு ஏற்படுகிறதே... அது எதனால்? அப்படியானால் கண்ணில் சுரக்கும் கண்ணீர் தொண்டை வழியாக உள்ளே போகாமல் வெளியேறுவது ஏன்?

– ஆர்.முருகதாஸ், பின்னவாசல்

காது – மூக்கு – தொண்டை நிபுணர் டாக்டர் எஸ்.ஆர்.ரவி: கண்ணில் சுரக்கும் நீரும் தொண்டைக்குள்தான் போகிறது. இது மூக்கு வழியாகத்தான் (அதாவது மூக்கின் உட்புறம்) தொண்டைக்குச் ஓரளவுக்குதான் ஒரு சமயத்தில் திரவம் அதற்குள் செல்ல முடியும். அழும்போது கண்ணீரின் அளவு இந்தக் குழாயில் கொள்ள முடியாத அளவுக்கு அதிகமாக இருப்பதால், அது கண் வழியாகவே வெளியேறுகிறது.

● காய்ச்சல் வந்தால் மெடாசின், க்ரோசின் போன்ற பாரசிடமால் மாத்திரைகளை எவ்வளவு நாட்களுக்குச் சாப்பிடலாம்? அதாவது எந்தக் கட்டத்தில் டாக்டரை அணுக வேண்டும்?

– ஏழுமலை, வேலூர்

மெடிக்கல் சர்வீஸஸ் அமைப்பின்

## ப்ரிஸ்கிரிப்ஷன்



* டாக்டர் ரவி



* டாக்டர் ஜெயவேலன்

# வழிவதேன்?

**இயக்குநர், டாக்டர் என்.ஏ.ஜெயவேலன்:**

பாரசிடமால் மாத்திரைகளை இரண்டு நாட்கள் வரை சாப்பிட்டும் காய்ச்சல் இறங்காவிட்டால் டாக்டரின் ஆலோசனையைப் பெற வேண்டும். ஆனால், வெறும் காய்ச்சல் அல்லது ஜலதோஷம் மற்றும் காய்ச்சல் இருந்தால் மட்டும்தான் இப்படி இரண்டு நாட்கள் தள்ளிப் போடலாம். நோய்த் தொற்றுக்கணக்கான வேறு அறிகுறிகள் - வாந்தி, சிறுநீர்ப் பிரச்னை குளிர், மூட்டுவலி, எச்சில் முழுங்க முடியாத அளவுக்குத் தொண்டையில் வலி, கடும் தலைவலி அல்லது சருமத்தில் தடிப்பு போன்றவை காணப்பட்டால் உடனே டாக்டரை அணுக வேண்டும். இதில் அலட்சியம் கூடாது.

எண்பது சதவிகிதம் பேருக்கு வரக்கூடிய காய்ச்சல் பாரசிடமாலினால் சரியாகிவிடுகிறது. இதில் இன்னொன்றையும் அறிந்துகொள்ள வேண்டும். இந்த மாத்திரைகள் தற்காலிக நிவாரணம் அளிக்குமே தவிர, காய்ச்சலின் வேரைக் கண்டுபிடித்து அதைக் களைந்துவிடுவதில்லை. நம் உடலின் நோய் எதிர்ப்புச் சக்தியே சிக்கலைச் சரிசெய்து கொள்கிறது. அதற்கு இந்த மாத்திரைகள் உதவுகின்றன என்று வேண்டுமானால் கூறலாம்.

- ஜி.எஸ்.எஸ்.

**மாத்திரைகளால் தற்காலிக நிவாரணம் அளிக்க முடியுமே தவிர, காய்ச்சலின் வேரைக் கண்டுபிடித்து குணப்படுத்துவதில்லை.**





**நா**யர் டீக்கடையோடு சாலை வளைந்து திரும்பியதும், நான் இறங்க வேண்டிய பேருந்து நிறுத்தம் வந்துவிடும்.

இறங்குவதற்காக, நான் பைகளுடன் எழுந்த போதே கிரீச்சிட்டு நின்றது பஸ்.

தடுமாறி விழப்போனவன், சமாளித்தபடி எட்டிப் பார்த்தேன்.

நடுச் சாலையில் ஒரு மாடு நின்று கொண்டிருந்தது.

பேருந்துகளும் கார்களும், ஆட்டோ, டூவீலருமாய், ஒரு நொடிக்குள் சாலை ஸ்தம்பித்துப் போய், களேபரமானது.

'ஹை டெசிபலில்' வாகனங்கள் ஹார்ன் அடிக்க, அந்த மாடு மிரண்டு போய், அங்கும் இங்கும் காற்றில் சிக்கிய சருகாய் அல்லாடியது.

அச்சச்சோ, அந்த மாட்டுக்கு ஒரு கண் இல்லை. பாவம், இருக்கும் மற்றொரு நல்ல கண்ணை வைத்துக்கொண்டு, தலையை, திருப்பித் திருப்பிப் பார்த்து குதித்தது. அதன் ஒவ்வொரு அசைவிலும் உயிர் பயம் தெரிந்தது.

என்னால் அதன் இயலாமையைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்க

**கிருஷ்ணா**

# தாய்ப் பசு!



முடியவில்லை.

பேருந்திலிருந்து விரைந்து இறங்கினேன்.

''ப்பா, ப்பா, ப்பா'' என்று சத்தமிட்டுக் கொண்டே அதன் அருகில் சென்றேன்.

''சார், முட்டிடப் போகுது மாடு'' என்று யாரோ பய முறுத்தினார்.

சட்டென்று ஒரு யோசனை. பைக்குள் இருந்த காய்கறிகளிலிருந்து, அகத்திக் கீரைக் கட்டை எடுத்தேன்.

கீரையை அதன் முன்னே நீட்டியதும், மாடு லபக்கென அதைப் பற்றிக் கொண்டது.

'ப்பா, ப்பா' என்று அழைத்தபடி நான் முன்னே நடக்க, மாடும் பின்னே வந்தது. நடைபாதையில் ஏறியதும், அதுவும் ஏறியது.

''சூப்பர் வாத்யாரே'' என்று யாரோ குரல் தர, யாரோ சிலர் கைதட்டினர். மெள்ள, மெள்ள வண்டிகள் நகர்ந்தன.

அது ஒரு பசுமாடு என்று மடியைப் பார்த்ததும் தெரிந்தது. அதன் அருகே சென்று முகத்தைத் தடவிக் கொடுத்தேன். அண்ணாந்து பார்த்து, கழுத்தை நீட்டியது.

''ஒண்ணும் இல்லைடா, கண்ணு'' என்று கழுத்தைத் தடவிக் கொடுத்தேன்.

எனது சிறுவயது ஞாபகம் மெள்ள நடைபோடத் துவங்கியது.

கிராமத்து வெளித் திண்ணையில் நானும் அம்மாவும் உட்கார்ந்து, மாலை நேரத் தெருவை வேடிக்கை பார்ப்போம்.

பக்கத்து வீட்டுக் கோனாரின் மாடு வந்து, அம்மா அருகில் நிற்கும். ஏழு வயதுச் சிறுவனான நான், மாட்டின் கொம்பைப் பார்த்து, பயந்து போய், அம்மாவின் முதுகில் பதுங்குவேன்.

அம்மா, மாட்டின் கழுத்தைத் தடவிவிட, அதுவும் சுகமாய்க் காண்பித்தபடி நிற்கும்.

''உனக்குப் பயமே இல்லையாம்மா?'' என்பேன்.

''நாம அதை அன்போடு பார்த்தால், நம்மிடமிருந்து வெளிப்படற அலைகள் மூலம், மிருகங்களுக்கு நம்ம அன்பு புரிஞ்சிடும். பயப்படாம, இப்படி வா, கையை நீட்டு.''

அம்மா என் கையைப் பிடித்து, அந்த மாட்டின் கழுத்தில் தடவுவாள்.

எனக்குள் பயத்தையும் மீறிய வீரதீர சாதனை உணர்வு பீறிடும்.

''என்ன சார், பால் வியாபாரம் பண்ணப் போறீங்களா?'' என்ற குரல் கேட்டு, நினைவு கலைந்தேன்.

எதிர்வீட்டு பரசுராமன் என்னைக் கடந்தபடி சென்றுகொண்டிருந்தார்.

"இல்லை, சும்மா" என்று சமாளித்தேன்.

வீட்டுக்குக் கிளம்பவும் மனசில்லை. இந்த மாடு, மறுபடியும் சாலையில் இறங்கி, வாகனங்களின் நடுவே மாட்டிக் கொண்டு, அடிபட்டுக்கொண்டால் பாவமாயிற்றே!

அதற்குள் மாடு பொதபொதவென சாணியையும் கோமியத்தையும் போட்டு, நடைபாதையை நாறடித்தது.

"நம்ம நாட்டுல தான் இப்படி! தன் வீட்டைச் சுத்தமாய் வைச்சுண்டு, தெருவை நாறடிக்கற குணம். மாட்டைக் கொண்டு வந்து எங்கே வைச்சுருக்கான் பாரு? நாலுபேர் நடக்கற இடம்ங்கற விவஸ்தை வேண்டாம்" என்று ஒரு சீனியர் சிட்டிசன் திட்டிக்கொண்டே சென்றார்.

எனது செல்ஃபோன் சிணுங்கியது. மனைவிதான்.

"ஏன் லேட்?"

"பக்கத்துலதான் இருக்கேன், இதோ... வந்துர்றேன்" என்றேன். நேரம் கரைந்து கொண்டிருந்தது.

மனைவி பார்வதி திடீரென்று ஆஜராகி விட்டாள்.

"என்ன இது? யாரோட மாடு? எதுக்கு நீங்க 'மாட்டுக்கார வேலன்' வேஷம் போட்டுண்டு நிக்கறீங்க?" என்று கேள்விக் கணைகளைத் தொடுத்தாள்.

விஷயத்தைச் சொன்னேன்.

"எத்தனை நேரம் இப்படியே நிப்பீங்க? கறவை நின்னு போன மாடு மாதிரி தெரியுது. மாட்டோட சொந்தக்காரன் தேடி வரவே இல்லைன்னா ராத்திரி முழுக்க நிப்பீங்களா, காவல் காத்துக்கிட்டு? டிராஃபிக் கொறைஞ்சதும் அதுவே தன் வீட்டுக்குப் போயிடும் வாங்க" என்றாள்.

மனைவி சொல்லைக் காதில் போடாமல் மாட்டின் நெற்றி, கழுத்தைத் தடவிக் கொடுத்தேன்.

"சமர்த்தாய், ஜாக்கிரதையாய் வீட்டுக்குப் போ" என்று அதனிடம் சொல்லி விட்டுக் கிளம்பினேன். கோபத்தில் மனைவி பார்வதி வீடு திரும்பினாள்.

**வீ**ட்டுக்குச் சென்று என் மனைவி டீ.வி. சீரியலில் மூழ்கிய நேரம் பார்த்து, மீண்டும் மாட்டைப் பார்க்க ரோட்டுக்கு வந்தேன்.

மாடு அங்கு இல்லை. தெருவின் இருபுறமும் பார்வையை வீசினேன். எங்கும் தென்படவில்லை அந்த மாடு. வீட்டுக்குப் போயிருக்கும் என்ற நிம்மதியுடன் திரும்பினேன்.

"எங்கே போனீங்க திடீர்னு? ஓ, உங்க டியர் தோஸ்த்தைப் பார்க்கவா?" என்று கிண்டல் செய்தாள், பார்வதி. சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது மெதுவாகக் கேட்டாள்,

"மாடுன்னா உங்களுக்கு அவ்வளவு இஷ்டமா?"

சற்று நேர அமைதிக்குப்பின்,

"எனக்குப் பதினைந்து வயசிருக்கும் போது, சாலையைக் கடக்கறப்ப, விபத்திலே எங்கம்மா போயிட்டாங்கன்னு உனக்குச் சொல்லியிருக்கேன்தானே?"

"ஆமாம்"

"இந்த பசு மாதிரியே எங்கம்மாவுக்கும் ஒரு கண் கிடையாது."

பார்வதி மௌனத்தில் உறைந்தாள். ●



"நான் எவ்வளவோ போராடியும் எங்க வீட்ல நம்ம கல்யாணத்துக்கு சம்மதிக்கல டியர்."

"அப்பாடா, நான் தப்பிச்சுட்டேன்!"

- கே.பாலசுப்பிரமணியன்








# ALTAJ
## Shoes

No.14, American College Complex, Goripalayam,
Madurai - 625 002. Ph : 0452-4360128



★ வானதி ஸ்ரீநிவாசன்.

**ஆண்–பெண் இருவரும் சமம்தான். அப்படியிருக்க, தாய்க்குலத்துக்கு எதற்குத் தனி அணி?**

★ கனிமொழி



அரசியல் கட்சிகள் போட்டி போட்டுக் கொண்டு மகளிர் மாநாடு நடத்தி, அவர்களின் வாக்கு வங்கியைக் குறி வைக்கின்றன. திருச்சியில் விஜயகாந்த் லட்சக்கணக்கான பெண்களைத் திரட்டி அசத்திவிட்டார். அடுத்து, அதற்குப் போட்டியாக தி.மு.க. மகளிர் மாநாடு கடலூரில் நடக்க விருக்கிறது. அரசியல் கட்சிகள், மகளிரை டார்கெட் செய்வது ஒரு பக்கம் இருக்க, 'ஆண்-பெண் இருவரும் சமம்தான். அப்படியிருக்க, தாய்க்குலத்துக்கு எதற்கு அரசியல் கட்சி களில் தனி அணி?' என்ற கேள்வியும் எழுகிறது.

''இப்போது, சமுதாயத்தில் பலவீனமாக இருப்பவர் களுக்கு இட ஒதுக்கீடு கொடுத்து கைதூக்கி விடுவது போன் றதுதான் இது. இன்னமும் நம் பெண்களுக்கு ஆண்களுடன் பழகுவது என்பதும், அவர்களோடு இணைந்து பணியாற்று வது என்பதும் ஒரு சங்கோஜமான விஷயம்தான். இந்த நிலையில், தனியாக அமைப்பு வைத்து கூட்டங்களை நடத்தி னால், எந்தவிதத் தயக்கமுமின்றி எல்லோருடனும் இணைந்து பணியாற்றும் எண்ணம் வரும். எனவே, மகளிர் அணி என்பது பொது வாழ்க்கைக்கான தயாரிப்புக் களம்தான்'' என்கிறார் பா.ஜ.க. மகளிர் அணியின் பொதுச் செயலாளர் வானதி ஸ்ரீநிவாசன்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் இயக்கத்தில் தனி மகளிர் அணி அமைப்பு இல்லை. ஆனால், ஜனநாயக மாதர் சங்கம் என்ற அமைப்பை நடத்தி வருகிறார்கள். ''இதற்கும் கட்சிக் கும் தொடர்பில்லை. கம்யூனிஸ்ட் இயக்கத்தில் இல்லாத வர்களும், ஜனநாயக மாதர் சங்கத்தில் உறுப்பினராக இருக் கிறார்கள். அவர்களை ஊக்குவிக்க உயர் கட்சிப் பொறுப்புகள் கொடுக்கப்படுகின்றன, எங்கள் கட்சியில்'' என்கிறார் அக் கட்சியின் சட்டமன்ற உறுப்பினரான பாலபாரதி.

தேசிய இயக்கமான காங்கிரஸில் தமிழ்நாட்டைப் பொறுத்தவரை மகளிர் காங்கிரஸும் பிரிந்துதான் கிடக் கிறது.

இன்றைக்கும் தமிழ் நாட்டில் அ.தி.மு.க.வில்தான் பெண்கள் அதிக அளவில் உறுப்பினர்களாக இருக்கிறார்கள். ஆனால், அவர்களில் பெரும்பாலோருக்கு வயது நாற்பதுக்கு மேல். எனவேதான் இளம்பெண்களைக் கட்சியில் சேர்க்க 'இளம் பெண்கள் பாசறை' என்ற அமைப்பை சமீபத்தில் உருவாக்கியிருக்கிறார் ஜெயலலிதா. ''கழகத்தில் தனியாக மகளிர் அணி இருந்தும், இளைய தலைமுறைக்காக இந்தத் தனிப்பாசறை அமைக்கப்பட்டிருக்கிறது'' என்று சொல்கிறார்

# அட்டென்ஷன்

கட்சியின் மகளிர் அணி செயலாளரான வளர்மதி.

"சமுதாயத்தில் காலம் காலமாக அடக்கி வைக்கப்பட்டு, வாய்ப்பு மறுக்கப்பட்டு வரும் சில பிரிவினருக்கு அங்கீகாரம் கொடுப்பது என்பது நாகரிகச் சமுதாயத்தின் கடமையாகும். அந்த வகையில் ஒடுக்கப்பட்ட மக்களுக்கு உரிய சலுகைகளும், உரிமைகளும் கிடைக்க வழி செய்யப்பட்டிருக்கின்றன. அதேபோன்று அடக்கி, முடக்கி வைக்கப்பட்டிருந்த ஒரு பிரிவுதான் பெண்கள். அவர்களையும் தேச நீரோட்டத்தில் கலக்கச் செய்யவும், அரசியல் விழிப்புணர்வு ஊட்டவும் தனிக் கவனம் தேவை. அந்த அடிப்படையில் உருவாக்கப்பட்டிருப்பதுதான் கட்சியின் மகளிர் அணி. அரசு மட்டத்தில் பெண்கள் நலன் இலாகா, உள்ளாட்சிகளில் தனி ஒதுக்கீடு போன்றவையும் இதே கண்ணோட்டத்தில்தான் இயங்குகின்றன. ஆனால், மகளிர் அணிகள் தற்காலிகமான ஏற்பாடே! ஆண்களோடு பெண்கள் அரசியல் உட்பட சகல துறைகளில் கலந்து பணியாற்றி சிகரங்களைத் தொட வேண்டும்" என்கிறார் தி.மு.க. ராஜ்ய சபா உறுப்பினர் கனிமொழி.

- ப்ரியன்



* வளர்மதி



* பாலபாரதி

# தாய்க்குலம்!

# ஈரமிருந்தால் ஹீரோ சூடு பறந்தால் ஜீரோ!

• ஏவி.எம்.சரவணன் •

அமெரிக்காவில் ஒரு சர்வே எடுத்தார்கள். முன்வணியில் வெற்றிகரமாகத் திகழ்பவர்களில் எழுபது சதவிகிதத்தினரின் வெற்றிக்கு, பேச்சு வன்மையும் காரணம் என்கிறது அந்த சர்வே. நாக்கைப் பக்குவமாகப் பயன்படுத்தத் தெரிந்தவர்களே இக்கலையில் தேறுகிறார்கள்.

சொற்களிலே சுகம் இருக்க வேண்டுமே தவிர, சூடு இருக்கக் கூடாது. சூடு இருக்கக் கூடாது என்பதற்காகத்தானோ என்னமோ ஈரமான இடத்தில் நாக்கை வைத்திருக்கிறான் இறைவன்!

திரையுலகில் பேச்சுவன்மைக்குப் பலரை உதாரணம் காட்டலாம். எம்.ஜி.ஆர். அவர்கள் எப்போதும் நட்பாகவே பேசுவார். யாரையும் கடிந்தோ அல்லது மோசமான வார்த்தைகளைச் சொல்லியோ சாடமாட்டார். சிரிப்புடன் அரவணைத்துக்கொண்டே தன்மையாகப் பேசுவார்.

அதேபோல, எஸ்.பி.முத்துராமனை நல்ல வார்த்தைகளின் தலைமையகம் என்பேன். இதுவரை நான் அறிந்து அவர் மோசமான வார்த்தை ஒன்றைக்கூடப் பயன்படுத்தியதில்லை. இனிமையாகவே பேசுவார்.

ரஜினிகாந்த் தம்மிடம் உதவியாளராய் இருந்த ஜெயராமனை அழைத்து, 'ஜெயராமன், சிகரெட் தர்றீங்களா? சாப்பாடு கொண்டு வந்து தர்றீங்களா?' என்றுதான் அன்பாகக் கேட்பார்.

பத்தாவது வரை மட்டுமே படித்து, வீடு வீடாக நடந்துபோய் தபால்களைப் பட்டுவாடா செய்து வந்த ஒரு தபால்காரர்,

சிவாஜி, எப்போது என்னைப் பார்த்தாலும், 'என்ன சரவணன், நல்லா இருக்கீங்களா?' என்று விசாரிப்பதுடன் நிறுத்திக் கொள்ளமாட்டார். என் மனைவியைக் குறிப்பிட்டு, 'லட்சுமி சௌக்கியமா இருக்காங்களா? நான் அவங்களை ரொம்பவும் கேட்டதாச் சொல்லுங்க' என்பார். அது மட்டுமல்ல, சில மாதங்கள் கழித்து லட்சுமியைப் பார்க்க நேர்ந்தால், 'உங்களை நான் ரொம்ப விசாரிச்சதா உங்க வீட்டுக்காரர்கிட்ட சொன்னேனே, சொன்னாரா?' என்று போட்டு வாங்குவார்!

★ ''என்ன சரவணன்... லட்சுமி சௌக்கியமா இருக்காங்களா?''



★ கற்றுத்தந்த குட்டிக்கதை!





★ கணேசன் : இன்சொல்லின் வெற்றி!

இன்று 'பில்டிங் காண்ட்ராக்ட்' தொழிலில் தன் முத்திரையைப் 'பளிச்' சென்று பதிய வைத்து முன்னணியில் இருக்கிறார். கணேசன் என்ற அந்த நண்பர், அன்று வீடு வீடாக நடந்தார். இன்று வீடு வீடாகக் கட்டிக்கொண்டிருக்கிறார். காரணம், அவரது இனிமையான வார்த்தைகள். தபால்காரராக இருந்த போதே அவர் வீட்டுக்காரர்களிடம் அன்பாகப் பேசினார். அதிர்ந்து ஒரு சொல் சொல்ல மாட்டார். விளைவாக, அவருடைய நட்பு வட்டம் பெரிதானது. அதில் இருந்த ஒரு பில்டரிடமிருந்து தொழில் நுணுக்கங்களைக் கற்றுக்கொண்டார். அவர் வெறுமனே புள்ளி வைத்துக் கொடுத்தார்; கணேசன் அதை வைத்து ரங்கோலி கோலமே போட்டுவிட்டார்!

ஆஃபீஸ் ஒன்றில் ஒரு பெண், பி.ஏ.வாகச் சேர்ந்தாள். நல்ல சம்பளம். அவருடைய பாஸோ (BOSS) சரியான சிடுமூஞ்சி. கடுகடுவென்று பேசுவார். அந்தப் பெண்ணுக்கும் கோபம் வரும். நன்றாகத் திட்டிவிட்டு வேலையை ராஜினாமா செய்துவிடலாமா என்றுகூட அந்தப் பெண் யோசித்தாள். ஆனால், சாப்பாட்டுக்கு என்ன செய்வது? எனவே, இப்பிரச்னைக்குத் தீர்வு கேட்டு, மனோதத்துவ டாக்டரிடம் போனாள். 'ராஜினாமா கொடுத்துவிடட்டுமா?' என்றும் கேட்டாள்.

'இப்போது கொடுக்காதே. யாராக இருந்தாலும் அவரிடம் ஒரு நல்ல குணமாவது நிச்சயம் இருக்கும். அதைப் பாராட்டு. ஒரு மாதம் கழித்து என்னை வந்து பார்' என்றார் அவர்.

தன் அணுகுமுறையை அந்தப் பெண் மாற்றிக் கொண்டாள். அந்த ஆஃபீஸர் ஒருநாள் ஓர் அழகான டை கட்டி வந்தார். 'ஸார், இந்த 'டை' உங்களுக்குப் பொருத்தமாக இருக்கு ஸார்' என்பாள். இன்னொரு நாள் 'திஸ் ஷர்ட் ஸூட்ஸ் யூ வெல்' என்பாள். இப்படி அவரைப் பாராட்டத் தொடங்கினாள்.

ஒரு மாதம் கழித்து மனோதத்துவ டாக்டரிடம் அந்தப் பெண் போனாள்.

'என்னம்மா எப்படி இருக்கே?'

தன் ஹாண்ட் பேக்கிலிருந்து ஒரு உறையை எடுத்து டாக்டரிடம் நீட்டினாள் அந்தப் பெண்.

'ஸார்... இது என் கல்யாண அழைப்பிதழ். எனக்கும் என் பாஸுக்கும் கல்யாணம். நீங்க வந்து வாழ்த்தணும்' என்றாள்.



**எழுபது சதவிகிதத்தினரின் வெற்றிக்குப் பேச்சு வன்மையும் காரணம்**

டாக்டர் வியப்பாகப் பார்த்தார்.

இந்தக் கதையை நான் சொல்லவில்லை. 'இன்று ஒரு தகவல்' தென்கச்சி சுவாமிநாதன் சொன்னார். நான் ரசித்தேன்.

தப்பாகப் பேசினாலும் 'நாக்கை வெட்டுவேன்' என்று யாரும் சொல்வதில்லை, 'பல்லை உடைப்பேன்' என்றுதான் சொல்வார்கள்.

அப்படிப்பட்ட நாக்கை நாம் பாதுகாக்காவிட்டால் வேறு யார் வந்து பாதுகாப்பார்கள்!

# ஜிலு ஜிலு தொடர்கதை - 2

இது ஒரு சதி. கடவுள் அல்லது சாத்தானின் அதிபயங்கரக் கெட்ட புத்தியின் கோரமான வெளிப்பாடு. இல்லாவிட்டால், ஃபர்ஸ்ட் ரேங்க் பன்னீர் செல்வம் ஏன் வளர்மதியின் மஞ்சள் நீராட்டு விழாவுக்கு வரவேண்டும்?

பத்மநாபனுக்கு ஆத்திரமும் அழுகையுமாக வந்தது. பன்னீரைத் தூக்கிப்போட்டு துவம்சம் செய்ய முடிந்தால் தேவலை. ஆனால் கடவுளே, என்னை ஏன் அரைநிஜார் அணிந்த பல்லி போல் படைத்தீர்?

பத்மநாபனுக்கு வயிறு எரிந்தது. கோபம் கோபமாக வந்தது.

''ஹாய் குடுமி! வளர் ஒன்லி ஆஸ்க்டு மி டு கம் டுடே. ஐயம் சர்ப்ரைஸ்ட் டு ஸீ யூ ஹியர்'' என்று பன்னீர் சொன்னான்.

கோபத்தைக் கிளறிவிட ஒரு வரியில் மூன்று விஷயங்கள். தன்னைப் பொதுவில் குடுமி என்று அழைத்தது முதலாவது. ஆங்கிலத்தில் பேசியது அடுத்தது. மூன்றாவதும் முக்கியமானதுமான விஷயம், வளர்மதியே இவனை வரச் சொல்லியிருக்கிறாள் என்பதாகும்.



பத்மநாபனுக்குக் கண்ணில் நீர் திரண்டுவிட்டது. கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டான். அவனுடன் ஏதும் பேச வேண்டாம் என்று நினைத்தான். ஆனால், வளர்மதியிடம் பேசியாக வேண்டும். இரண்டில் ஒன்று இன்றைக்குத் தெரிந்தாக வேண்டும்.

''வளரு! நீயா இவனை வரச் சொன்ன?'' துணிச்சலை வரவழைத்துக்கொண்டு அவன் கேட்டான், அது வளர்மதிக்குக் கேட்கவில்லை.

நல்லது. உலகம் பழிவாங்குகிறது. ஒரு காதல் கடிதம் கொடுக்கப்படாமலேயே கிடக்கிறது. கடங்காரன் பன்னீர் வந்து கெடுத்துவிட்டான். வளர்மதி சந்தோஷமான மனநிலையில் இருக்கும்போது கொடுத்தால், விளைவு வேறுவிதமாக இருப்பினும் விபரீதமாகாது என்று எண்ணியே பத்மநாபன் அந்தத் தருணத்தைத் தேர்ந்தெடுத்திருந்தான். தவிரவும், தன் உள்ளக் கிடக்கை அவளுக்கு முன்கூட்டியே ஒருவாறு தெரிந்திருக்கும் என்றும் நம்பியிருந்தான்.

அப்படியிருக்கையில் ஏன் தன்னை அழைக்காமல் பன்னீரை அவள் அழைத்தாள்?

புரியவில்லை. மிகவும் குழப்பமாகவும் துக்கமாகவும் இருந்தது. ஒரு வேளை

# கால் கிலோ காதல்... அரை கிலோ கனவு..!



வளர்மதி பன்னீரை லவ் பண்ணுகிறவளாக மட்டும் இருந்துவிட்டால், இந்த உலகில் தான் இனியும் வாழ்வதில் அர்த்தமே இல்லை என்று அவனுக்குத் தீர்மானமாகத் தோன்றியது.

பத்மநாபன் இதுவரை ஆறு பேரைக் காதலித்திருக்கிறான். ஏழாம் வகுப்பில் இருந்தபோது பொற்கொடி. எட்டாவதில் ஜெயலலிதா, தனலட்சுமி, ராதிகா. எட்டாம் வகுப்பு விடுமுறையில் விக்டோரியா. ஒன்பதாம் வகுப்புக்கு வந்த புதிதில் பிரேமகுமாரி.

அவற்றையெல்லாம் எப்படிக் காதல் என்பது? எதுவும் ஒரு சில மாதங்களுக்கு மேல் நீடித்ததில்லை. நண்பர்கள் அனைவரிடமும் தனது காதலை ஒரு சுற்று சொல்லி முடிப்பதற்கு முன்னால் அது காணாமல் போயிருக்கும்.

'ஆனா, வளர்மதி விஷயம் அப்படி இல்லடா. என்னிக்கு அவளைக் காதலிக்கத் தொடங்கினேனோ, அன்னைலேருந்து இந்த நிமிஷம் வரைக்கும் அவளை நினைச்சாலே மனசுக்குள்ள ஜல்னு ஒரு சலங்கைச் சத்தம் கேக்குதுடா. காதெல்லாம் சூடாயிடுது. தரைல கால் வெச்சா, பஞ்சுமூட்டைமேல வெக்கிற மாதிரி இருக்கு. விக்டோரியா, தனம், ராதிகாவைக் காதலிக்கும்போதெல்லாம் இப்படி இருந்ததில்லைடா' என்று பல சமயம் தன் உயிர் நண்பன் தண்டபாணியிடம் அவன் சொல்லியிருக்கிறான்.

நான்கு வருடங்களில் 17 பேரைக் காதலித்துவிட்டு பதிலுக்கு யாராலும் காதலிக்கப்படாமல் கைவிடப்பட்டவனான தண்டபாணி, இது விஷயத்தில் பொதுவாக கருத்து சொல்வதில்லை. வகுப்பில் ஒவ்வொரு பையனும் யாரேனும் ஒருத்தியைக் காதலித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். ஒவ்வொரு பெண்ணுக்கும்

யாரேனும் ஒரு பையன் மீது விருப்பம் இருக்கத்தான் செய்கிறது. ஆனால், யாரும் வெளிப்படுத்துவதில்லை. இது 'தில்' இல்லாத விஷயமாக, சேளம்பாக்கம் அரசினர் உயர்நிலைப்பள்ளி வளாகத்தில் அறியப்பட்டிருக்கிறது. பத்மநாபன் இந்த முறை வளர்மதியைக் காதலிக்கத் தொடங்கியதிலிருந்து, தண்டபாணி ஒருவன் தவிர வேறு யாரிடமும் வாய் திறக்கவில்லை. ரகசியம் காக்கப்படும்போது காதலின் வாசனை அதிகரிக்கிறது. அதன் மென் அழுத்தம் மேலும் சுகமூட்டுகிறது. தவிரவும், சொல்லாத காதல் சுகமான அவஸ்தை.

காதலிக்கிறவளிடமுமா?

அதனால்தான் சொல்லிவிடலாம் என்று கிளம்பிவந்தான். கேடுகெட்ட ஃபர்ஸ்ட் ரேங்க் பன்னீர் சொதப்பிவிட்டான்.

ஏழு நாள் கழித்து வளர்மதி பள்ளிக்கு வரத் தொடங்கினாள். நீலத் தாவணியும் வெள்ளைச் சோளியும். இரட்டைப் பின்னலும் பட்டாம்பூச்சிபோல் சிறகு விரித்த ரிப்பனும். மேலான வெட்கமும் மெலிதான புன்னகையும்.

பார்த்த கணமே பத்மநாபனுக்குக் கிறுகிறுவென்று ஆகிப்போனது. பத்மநாபனும் தண்டபாணியும் கிசுகிசுத்துக் கொண்டார்கள்.

'உஷ்' என்றார் கணக்கு வாத்தியார் மகாலிங்கம். பொதுவாக மாணவர்களுக்கு அவரைப் பிடிக்காது. கணக்குப் பாடம் எடுப்பதால் மட்டுமல்ல. பள்ளியில் உடற்பயிற்சி ஆசிரியராகவும் ஸ்கவுட்ஸ் மாஸ்டராகவும் விசாரணை அதிகாரியாகவும் அவரே இருப்பதுதான் காரணம்.

''என்னடே?'' என்றார் மகாலிங்க வாத்தியார்.

''தெர்ல சார். குடுமிதான் சிரிக்கிறான் சார்.''

''எதுக்குடா சிரிக்கிற?''

''ஒண்ணுமில்ல சார். இவன் சும்மா போட்டுக் குடுக்கறான் சார்.''

''ரெண்டு பேரும் உதைபடப் போறீங்க.''

பத்மநாபனுக்கு வகுப்பு பிடிக்கவில்லை. தான் அநாவசியமாக நாளையும் பொழுதையும் கடத்துகிறோம் என்று தோன்றியது. இதற்கு மேலும் கடத்தினால் கண்டிப்பாக பன்னீர் முந்திக்கொண்டு விடக்கூடும்.

ஒரு முடிவுக்கு வந்தவனாக, அந்த வகுப்பு முடிந்து அடுத்த ஆசிரியர் வருகிற இடைவெளியில் சட்டென்று எழுந்து வளர்மதியிடம் சென்றான்.

''என்னடா?''

''வந்து... நீ ஏன் அன்னிக்கு

## எட்டுக் கூத்து; எ.வ.வேலு!

சமீபத்தில் தி.நகர் வாணிமஹால் பக்கம் போனவர்களுக்கு ஒரு ஆச்சர்யமான காட்சி. கறுப்பு-சிவப்பு கரைவேட்டிகளுடன் நிறைய உடன் பிறப்புகள் அரங்கத்துக்குள் நுழைந்து கொண்டிருந்தனர். வேளுக்குடி கிருஷ்ணன் அவர்களின் ராமாயண உபந்யாசம், தரைத்தள அரங்கத்தில் நடந்து கொண்டிருந்தது. அதற்குத்தான் செல்கிறார்களோ என்று வியப்புடன் பார்த்தால், உடன் பிறப்புகள் சென்றது, மாடியில் உள்ள அரங்கத்துக்கு. அங்கே தமிழ்நாடு இயல், இசை, நாடக மன்றத்தின் சார்பாக 'பாஞ்சாலி சபதம்' தெருக்கூத்து. சிறப்புப் பேச்சாளர் அமைச்சர் எ.வ.வேலு. வசைக் கூத்து, புகழ்க்கூத்து, வேத்தியல் கூத்து என்று எட்டு வகையான கூத்துக்களை பட்டியல் போட்டு, பகுத்தறிவு பாணியில் அவற்றை விளக்கி 16ஆம் நூற்றாண்டில் துவங்கிய நாடக வரலாற்றை எடுத்துச் சொல்லி, ஒரு பெரிய ஆராய்ச்சிப் பேருரையை நிகழ்த்தி, எல்லோரையும் அசத்திவிட்டார் வேலு.



– கௌசி

ஃபங்ஷனுக்கு என்னைக் கூப்புடல? நானேதான் வந்தேன்.''

''சீ போடா ஓரசு. இதுக்கெல்லாம் உன்னிய மாதிரி பசங்களக் கூப்புட மாட்டாங்க.''

''பன்னீரை மட்டும் ஏன் கூப்ட்ட?''

அவள் ஒரு கணம் பன்னீரைப் பார்த்தாள்.

''அப்படின்னு அவன் சொன்னானா?''

''ஆமா.''

''பொய் சொல்லியிருக்கான்.''

பத்மநாபனுக்கு அதுவே போதுமானதாக இருந்தது. மனமும் ஆன்மாவும் கொதிப்பு அடங்கியதுபோல் லேசாகிவிட்டது.

''டேய்! இந்தப் பக்கம் வாடா. எப்பப் பார் கேர்ள்ஸ் பக்கம் என்ன பேச்சு?''

சட்டென்று பின்புறம் தோளில் கைவைத்து இழுத்தது பழனி வாத்தியார் என்பது அடித்த வாடையிலேயே தெரிந்தது.

''இருங்க சார், கணக்குல ஒரு சந்தேகம் கேட்டுக்கிட்டிருக்கேன்.''

''பிச்சுப்புடுவேன் படவா, கணக்கு சந்தேகம் கேக்கற மூஞ்சியப் பாரு.''

''இந்த மூஞ்சி கணக்கு சந்தேகம் கேக்கலைன்னா வேற என்ன சார் கேக்குது?'' என்றான் கடைசி பெஞ்ச் கலியமூர்த்தி. அவனுக்கு வெகுநாட்களாகவே பத்மநாபன் மீது ஒரு கண்.

''பசங்களா! ஒழுங்கா படிச்சி பாஸ் பண்ற வழியப் பாருங்க. இந்த ஸ்கூல்ல நைன்த் பி மட்டும் ரொம்ப கெட்ட கிளாஸா இருக்குன்னு ஸ்டாஃப் ரூம்ல அடிக்கடி புகார் வருது. எச்.எம். ரொம்ப கோவத்துல இருக்கார், சொல்லிட்டேன். என்ன வேணா பண்ணுங்க. பொண்ணுங்களோட பேசற வேலை மட்டும் வெச்சிக்காதீங்க.''

பத்மநாபன் அந்தக் கணம் முடிவெடுத்தான். இம்முறை ஒரு கடிதம் எழுதினான். மறக்காமல் செய்திச் சுருக்கத்தை 'ஐ லவ் யூ' என்று தலைப்பில் வைத்தான்.

வகுப்புகள் முடிந்து வளர்மதி வீட்டுக்குக் கிளம்பும்போது 'ஒரு நிமிஷம்' என்று கூப்பிட்டு, அவள் கையில் நேரில் அளித்தான்.

''என்னது?''

''பொண்ணுங்களோட பேசக்கூடாதுன்னு பழனி சார் சொன்னாரில்ல? அதான் எழுதி இருக்கேன். லவ் லெட்டர். வீட்டுக்குப் போயி படிச்சுப்பாரு'' என்று சொல்லிவிட்டு வேகமாக வெளியே ஓடினான்.

''என்னதுடி?'' என்று கேட்டபடி அவளது தோழி ஜெயலட்சுமி அருகேவர, ''இவனும் லவ் லெட்டர் குடுத்திருக்கான்டி. இதோட சேர்த்து மொத்தம் பதினொண்ணு!'' என்று சிரித்தாள்.

(தொடரும்)



**மேஷம் :** இந்த தமிழ் வருஷமே உங்களுக்கு சூப்பரா ஆரம்பிக்கப் போகுதுங்க. நீங்க நினைக்கிற ஒவ்வொண்ணும் நடந்து பெரிய சாதனையாளரா வலம் வரப் போறீங்க. தொழில ஜம்முன்னு ஆரம்பிக்கப் போறீங்க. நீங்க ஒரு வார்த்தை சொன்னா அதுக்கு அப்பீலே கிடையாது. மொத்தத்துல இந்த வருஷம் பெரிய யோகம்தான் போங்க. அதோடு ராகு / கேது / சனி வழிபாடு உங்கள உச்சத்துக்குக் கொண்டு போகும்.



**ரிஷபம் :** இந்த வருஷத்தின் தொடக்கமே கூலாக ஆரம்பிக்கப்போகுது. கவலையை விடுங்க. உங்களுடைய திருமணம், ஜம்முன்னு எதிர்பார்த்த அழகான துணையோடு அமையப்போவுது. பெண்களுக்கு இருந்த உடல் நலக்குறைவுகள் தீர்ந்து கும்மா 'நச்'சுன்னு ஆகிடுவீங்க. கட்டடக்கலை, அச்சுக்கலை மாதிரியான தொழில்ல இருக்கிறவங்களுக்கு நல்ல ஏற்றம் வரும். அரசியல்வாதிகளுக்கும் இது சூப்பர் டைமுங்க. இந்த வருஷத்துல நாலு மாசம் மட்டும் பார்த்து நடந்துக்குங்க. வியாழன் தோறும் குரு பகவானுக்கு தீபம் ஏற்றி வழிபாடு செய்து வந்தீங்கன்னா, நன்மையே நடைபெறும்.



**மிதுனம் :** ஸர்வதாரி தொடக்கத்திலேயே நீங்க பெரிய சாதனை செய்யப் போறீங்க. அது நீங்க சார்ந்து இருக்கற துறையிலேயே இருக்கலாம். மாணவர்கள் என்றால் நிறைய மார்க் எடுத்து மாநிலத்திலேயே முதலிடம் பெறுவீங்க. வீடு, மனை வாங்கணும் என்று உங்க மனசிலே இருந்த ஆசை நிறைவேறப் போகுது. கலைத்துறையில் இருக்கறவங்களுக்கு நிறைய வாய்ப்புகள் வரும். காதல்ல இருந்து வந்த தடைகள் நீங்கி, காதலர்கள் திருமணம் செஞ்சுக்குவீங்க. செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் விரதம் இருந்து, ராகு / கேது / சனி கோயில்களுக்கு தீபம் ஏற்றி வழிபட்டால் இன்னும் நன்மை பெறுவீங்க.

**கடகம் :** கடக ராசிக்காரர்களே, இந்த வருஷம் இனிமையா தொடங்கப்போகுதுங்க. இது நாள்வரை நீங்க ஒண்ணு நெனைச்சீங்க. வேறு ஒண்ணு நடந்தது. இனிமே அப்படி இருக்காது. நீங்க நினைக்கிற ஒவ்வொண்ணும் நடந்து உங்களை மகிழ்ச்சியில ஆழ்த்தப் போகுது. உங்கள அலைக்கழித்துக்கொண்டிருந்த 'பூர்வீக சொத்து' பிரச்னை தீர்ந்து வெற்றிக் கனியைப் பறிக்கப்போறீங்க. இல்லன்னா வீண் அவப்பெயர் வரும். காதல்ல ஈடுபடறவங்க ஜாலி டூர் போவீங்க. ஆக, மொத்தத்துல நிறைய நன்மைகளும் குறைவான சங்கடங்களும் நிறைந்த வருஷம். வியாழன் தோறும் தக்ஷிணாமூர்த்தி ஆலயம் சென்று பூ மாலையிட்டு வணங்கி வர சங்கடம் தீருமுங்க.

**சிம்மம் :** இதுநாள் வரைக்கும் 'எப்படா நல்ல காலம் வரும்'னு கலங்கிக் கொண்டிருந்த சிம்மராசிக்காரர்களே! இந்த வருஷம், இழந்த செல்வாக்கைத் திரும்பத் தரப் போகுது. உங்கள ஒழிக்கணுமுன்னு

# தமிழ்ப் புத்தாண்டு

# தஞ்சை பரத்வாஜ்

கங்கணம் கட்டிக்கிட்டு திரிஞ்ச எதிரிங்க எல்லாம் 'எஸ்கேப்'பா விடுவாங்க. நீங்க சாதாரணமா பேசினாலும் பெரிய அளவில சர்ச்சையாக மாறும். கலைஞர்களுக்குச் சன்மானம் பெரிய அளவில் கிடைக்கும். வெளிநாடு போகணுமுன்னு 'கனவு' கண்டுக்கிட்டு இருந்தவங்களுக்கு இலவச அழைப்பு வரும். சனிக்கிழமை தோறும் சனீஸ்வரனுக்கு எள் தீபம் ஏற்றி வழிபாடு செய்தால், வெற்றி மாலை உங்களைத் தேடி வரும்.



**கன்னி :** தேவையில்லாத பிரச்னையில மனசொடிந்துபோய் இருக்கும் கன்னி ராசிக்காரங்களே! இந்த வருஷம் தொடக்கமே அமர்க்களமாக ஆரம்பிக்கப் போகுது, கவலைய விடுங்க. மறைமுகமாக அச்சுறுத்திக்கொண்டிருந்த எதிரிங்க எல்லாம் ஒதுங்கிப்போய்டுவாங்க. புதிய தொழில் தொடங்கி நாலு பேருக்கு வேலை கொடுப்பீங்க. கலைஞர்களுக்குப் பரிசு மழை பெய்யும். வியாபாரிங்க நல்லா லாபம் பாப்பீங்க. அரசியல்வாதிங்க, இழந்த செல்வாக்கை மீட்டுக்குவீங்க. தடைப்பட்ட சுப காரியங்கள் ஜம்ஜம்முன்னு நடக்குமுங்க. காதலருங்க, வசந்த காலப் பறவையாகச் சிறகடிப்பீங்க. மொத்தத்துல ஏற்றமும் ஜாலியும் நிறைந்த வருஷம். சனிக்கிழமைதோறும் விரதமிருந்து ஆஞ்சநேயர் வழிபாடு செய்தால் ஜாலி இன்னும் பெருகுமுங்க.



**துலாம் :** தோல்வியால் துவண்டு போயிருந்த துலாம் ராசிக்காரர்களே! உங்களுக்கு இந்த வருஷம் அபார வளர்ச்சியுள்ளதாக ஆரம்பிக்கப் போகுதுங்க. இது நாள் வரை நீங்கள் தொடங்கின ஒவ்வொரு காரியமும் பாதியில நின்னு போயிருந்தது. இனிமே அப்படி இருக்காது. நீங்கள் தொட்டால் மண்கூட பொன்னாகும். குடும்பச் சிக்கல் தீர்ந்து, பிரிந்த குடும்பம் ஒண்ணாகும். கல்வி, ஞானம் பெருகுமுங்க. வரவு அதிகரிக்கும். செலவு குறையும். அரசியல்வாதிங்களுக்குப் புதிய பதவிகள் வரும். கலைஞர்களுக்கு நிறைய வாய்ப்புகள் வரும். உங்க சாதனைகள மெச்சி, விருது தருவாங்க. ஆக மொத்தத்துல, வெற்றி உங்களை சந்தோஷத்தில் நிறைக்கும் வருஷம் இது. வியாழன் தோறும் ராகவேந்திர சுவாமியை வழிபாடு செய்து வந்தால், தோல்வியே நெருங்காது.

**விருச்சிகம் :** பணப் பிரச்னையால் அடிக்கடி அவதிப்பட்டு வந்த விருச்சிக ராசிக்காரங்களே... இந்த வருஷம் உங்களுக்குப் பணக் கஷ்டமே இருக்காது. உங்க 'வாக்கு' வலிமை பெறும். கடன் தொல்லைகள் தீர்த்துடுவீங்க. வேலை விஷயங்களில் நிறைய மாற்றங்கள் வரும். வியாபாரத்துல நல்ல மாற்றத்தைப் பாப்பீங்க. அரசியல்வாதிங்களுக்கு நல்ல காலம். மக்கள் மத்தியில் செல்வாக்கு பெருகும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வாய்ப்பு பெருகும். சனிக்கிழமை தோறும் சனீஸ்வரன வழிபாடு செய்து



## பலன்கள் - 2008



வந்தால் நினைத்த காரியங்கள் தடையில்லாமல் நடைபெறும்.

**தனுசு :** வெற்றி நடைபோட்டுக் கொண்டிருந்த தனுசு ராசிக்காரர்களே... இந்த ஆண்டு துவக்கமே சற்று நிதானத்தைக் கடைப்பிடிக்கணும். தேவையில்லாத பிரச்னைங்க வீடுதேடி வருமுங்க. எந்தக் காரியமும் கடின முயற்சிக்குப் பிறகுதான் நடைபெறும். அதே நேரத்துல பணக் கஷ்டம் இருக்காதுங்க. ஷேர் மார்க்கெட்ல பணம் போடுறவங்க கவனமாக இருக்கணும். உத்தியோகஸ்தர்ங்க, மேலதிகாரிங்க முடிவுக்குக் கட்டுப்பட்டு நடக்கணும். வெள்ளிதோறும் ராகு / கேது தீபம் ஏற்றி வழிபாடு செய்து வந்தால் நன்மை பெறலாம். திருகாளத்தி அல்லது திருநாகேஸ்வரம் சென்று வரவும்.



**மகரம் :** மகர ராசிக்காரர்களே, உங்களுக்கு இந்த ஆண்டின் துவக்கமே நல்ல மேன்மையான ஆண்டாகத் தொடங்கியுள்ளது. கடந்த வருடங்களில் ஏற்பட்ட பிரச்னைகள் உங்களை விட்டு ஓடிப் போயிடும். எல்லா வகையிலும் இந்த வருடம் இனிமையாக அமையும். விலகிப்போன நண்பர்கள், உறவினர்களோடு ஒற்றுமையாக இருப்பீங்க. சுபகாரியங்கள் நடக்கும். பணம், கல்வி பெருகுமுங்க. குடும்பத்தில் மகிழ்ச்சி பெருகும். அச்சுத் தொழில், வணிகத்தில் உள்ளவர்கள் ஏற்றம் காண்பாங்க. அரசியல், கலைத்துறையில் உள்ளவங்களுக்குப் புதிய பதவிகள், வாய்ப்புகள் தேடி வரும். வெள்ளி / செவ்வாய் ராகு / கேது தீபம் ஏற்றி வழிபாடு செய்து வந்தால், தீமைகள் அறவே குறைந்து நன்மையே நடைபெறும்.

**கும்பம் :** கும்பராசிக்காரர்களே, உங்களுக்கு இந்த ஆண்டு சிறப்பாக அமையப் போகுதுங்க. நினைத்ததெல்லாம் நடக்கும், வாக்குவன்மை மேலோங்கும். இனி ஜாலியாய்டுவீங்க. எல்லா வகையிலும் சூப்பரான யோகம் காத்துக்கிட்டு இருக்கு. குடும்பத்துல இனி சிரிப்போசைதான் கேட்கும். பணக் கஷ்டம் அறவே இருக்காதுங்க. உடல் நல்ல நிலையில் இருக்கும். வேலைப்பளு குறையும். புதிய வேலை வாய்ப்புங்க வீடு தேடி வரும். வியாபாரம் பெருகுமுங்க. அரசியல்வாதிங்களுக்கு நற்பெயர் கிட்டும். வாகன யோகம் வாய்க்கும். உங்க திறமைக்கு நல்ல பாராட்டு கிடைக்கும். சனிக்கிழமைதோறும் சனீஸ்வரனுக்கு தீபம் ஏற்றி வழிபாடு செய்தால் நன்மை அதிகமாகும்.

**மீனம் :** வெற்றி நடைபோட்டு வரும் மீன ராசிக்காரங்களுக்கு, உங்களுக்கு இந்த ஆண்டும் குறையொன்றுமில்லை. புதிய தொழில் தொடங்குவீங்க. நண்பர்களைப் பிரிய நேரலாம். வேலையில் இடமாற்றம் உண்டு. எதிரிகள் உங்களை விட்டு விலகுவார்கள். உடல் ஆரோக்கியம் நல்ல நிலையில் இருந்து வரும். புதிய சொத்து வாங்குவீர்கள். சமூகத்தில் மதிப்பும் மரியாதையும் உயருமுங்க. அரசுத்துறை, கட்டட மற்றும் வணிகத்தில் ஈடுபடுகிறவர்களுக்கு நல்ல ஏற்றம் ஏற்படுமுங்க. வெளிநாட்டு அழைப்பு உங்களுக்கு வரும். கலைஞர்கள் புதிய ஒப்பந்தங்கள்ல கையெழுத்து இடுவாங்க. வியாழன்தோறும் குரு வழிபாடு செய்து வந்தால் நன்மை பெருகுமுங்க.

செங்கல்பட்டு வரை வேகமாக விரிவடைந்து வரும்
சென்னை மகாநகரத்தில் இப்பொழுது உங்களுக்காக

# முத்தான மூன்று மனைகள்

## முதலீட்டிற்கான அரிய வாய்ப்பு!

வழங்குகிறோம் BLBயின் மூன்று அற்புதமான மனைப்பிரிவுகள்

BLB
PLEDGED TO ETHICS

BLB வழங்கும் ஒவ்வொரு மனையும் அதன் நம்பகத்தன்மை, அங்கீகாரம் மற்றும் தொழில் அணுகுமுறை ஆகிய முத்திரைகளை பெற்றிருப்பதுடன் உங்களுக்கு வளமான எதிர்காலத்தையும் கொணர்ந்தளிக்கின்றது. இதை கடந்த 10 ஆண்டுகளாக 6000க்கும் மேற்பட்ட வாடிக்கையாளர்கள் (வெளிநாடு வாழ்இந்தியர் உட்பட) கண்டு உணர்ந்துள்ளனர். ஆக, மனைகளை வாங்குவதற்கு மிகவும் நம்பகம் வாய்ந்த பெயரை நீங்கள் நாடினால் அந்தவிதத்தில் BLB ஈடு இணையற்றது என்பதை உறுதியாகக் கூறலாம்.

**ஸ்ரீ ஹயக்ரீவா நகர்**
மஹிந்திரா வேர்ல்ட் சிட்டி அருகில்
(DTCP அனுமதி எண். 117/2007)

**ஸ்ரீ ராமானுஜர் டவுன்**
வண்டலூர்
(DTCP அனுமதி எண். 151/2006)

**ஸ்ரீ பத்மநாபா அவென்யூ**
காஞ்சீபுரம் டவுன்
(DTCP அனுமதி எண். 188/2004)

- ↗ இரயில் மற்றும் பஸ் மார்க்கத்தில் நன்கு இணைக்கப்பட்டுள்ளது
- ↗ 15" ஆழத்தில் கிடைக்கும் சுவையான நிலத்தடி நீர்
- ↗ சுற்றிலும் வீடுகள் / உடனே வீடுகட்டி குடியேறலாம்
- ↗ முழுவதும் தார்ச் சாலைகள்
- ↗ முழுமையாக வேலியிடப்பட்டது
- ↗ சிறந்த முதலீடு, வேகமாக உயரும் நிலமதிப்பு
- ↗ தெளிவான பத்திரம்
- ↗ 5 ஆண்டு பாதுகாப்பு சேவை

மனை மகிழ்ச்சி செழிப்பு

இலவசமாகப் பார்வையிட அழைக்கவும்:

# 28345104


## BLB ESTATES PRIVATE LIMITED

"SREE AUDISESHA BHAVAN", New No. 21, Chinnaiah Street, (Off. G.N. Chetty Road & Thirumalai Pillai Road),
**T.Nagar, Chennai - 600 017.** E-Mail: blbestmail@vsnl.net Website: www.blbestates.com

## கவலா சாப்பிடுங்க!

# ஒல்லியாகலாம்

சில வருடங்களுக்கு முன் நடைபெற்ற நிகழ்ச்சி இது. ஒரு அமெரிக்க கப்பலில் ராணுவத்தினர் போய்க்கொண்டிருந்தனர். புயல் காரணமாக கப்பல், தீவு ஒன்றில் தரை தட்டியது. உதவிகேட்டு தொடர்புகொள்ள முடியவில்லை. இருந்த உணவுப் பொருட்கள் வேறு சீக்கிரமே தீர்ந்துவிட்டன. கப்பலில் பாக்கி இருந்தது பாலாடைக் கட்டிகள்தான் (அதாவது சீஸ்). வேறு வழியில்லாமல் அதை மட்டுமே சாப்பிட்டு, சில வாரங்களைக் கடத்தினார்கள். பிறகு உதவி கிடைத்து, வேறொரு கப்பலில் ராணுவ அலுவலகத்தை வந்தடைந்தார்கள்.

''கடும் சோதனையைத் தாண்டி வந்திருக்கும் ராணுவ வீரர்களான எங்களை அரசு கௌரவிக்க வேண்டும்'' என்றார்கள்.



ஆனால், அவர்களுக்குக் கிடைத்த பதில் வேறு விதமாக இருந்தது.

''உங்களை கௌரவிக்கிறோம்; ஆனால், இனி நீங்கள் ராணுவ வீரர்கள் அல்ல.''

வேறு வழியில்லை. ராணுவத்தில் தொடர்ந்து பணி புரிய முடியாத அளவுக்கு அவர்களின் உடல் எக்கச்சக்கமாகப் பருத்திருந்தது. சீஸ் வாரி வழங்கிய கொலஸ்ட்ராலின் விளைவு. இதன் தொடர்ச்சியாக பலவித நோய்களுக்கும் அவர்கள் உள்ளாகியிருந்தனர்.

சர்க்கரை, புரதமாக இருந்தாலும் அதுவும் கொழுப்புச் சத்தாக மாற்றப்பட்டு தான் திசுக்களில் சேமிக்கப்படுகின்றது. சேமிப்பு அதிகமாக ஆக, தொப்பை மேலும் மேலும் விரிவடைகிறது (சேமிப்பு குறைய வேண்டும் என்றால், உடற்பயிற்சி மூலமாகத்தான் அதைக் குறைக்க வேண்டும்). இயல்பு வாழ்க்கையில் மிகக் குறைவாக உபயோகத்துக்கு உட்படுபவை வெளிப்புற வயிற்றுத் தசைகள் என்பதால், நாமாக விரும்பி பயிற்சி செய்தாலொழிய தானாக இந்தக் கொழுப்பு குறைவதில்லை.

வயிற்றுக்கு அடுத்ததாக இந்தக் கொழுப்பு இடுப்பு, கன்னம், தொடை போன்ற பகுதிகளில் சேமிக்கப்படுகிறது (நல்லவேளையாக இதயம் தப்பித்துவிடுகிறது). சிலருக்கு முதுகுப் பகுதியில்கூட சேமிப்பு நடக்கிறது.

சமீபத்தில் ஓர் இளைஞருக்கு வயிற்றுப் பகுதியில் அறுவை சிகிச்சை செய்தபோது, சுமார் அரை அடி ஆழத்துக்கு இந்தக் கொழுப்புப் படலம் இருந்ததைக் கண்டு அதிர்ச்சி அடைந்தேன்!

கடலை நார்ச் சத்து மிகுந்த ஓர் உணவு. ஓரளவு (சுமார் 150 கிராம்) சாப்பிடுவதால் உடலுக்கு எந்தப் பாதகமும் இல்லை. தவிர, வைட்டமின் சத்துகள் கொண்டது நிலக்கடலை. நிலக்கடலையை அவித்துச் சாப்பிடுவது மிகவும் நல்லது.

பாசிப்பயறும் புரதம் நிறைந்தது. நீரில் ஊறவைத்து முளைகட்டும்போது அவற்றில் பல என்சைம்களும், வைட்டமின்களும் சேர்ந்து முளைவிடுகின்றன. தாயான விதை, சேயான செடிக்குத் தரக்கூடிய முழுமை உணவு முளை தானியத்தில் கிடைக்கிறது. எனவே சுலபமாக




# வாங்க..!

ஜீரணிக்கக் கூடியதாகவும் இருக்கும். கொஞ்சம் தக்காளி, வெங்காயம் அரிந்து போட்டு, உப்பு, மிளகுத்தூள் சேர்த்தால் சத்தான 'சாட்'!

அரிசி, உளுந்து, ஈஸ்ட் ஆகிய மூன்றும் கலந்த இட்லி, வேக வைக்கப்பட்ட நிலையில் குடலுக்கு வேண்டிய பல சமாசாரங்களைக் கொண்டுள்ளது.

ஈஸ்டைத் தனியாகச் சேர்க்க வேண்டாம். நம்வீட்டுப் பெண்மணிகள் அரிசி மாவைக் கலக்கும்போது, அவர்கள் கையில் உள்ள ஈஸ்ட்டும் சேர்ந்து கலந்து விடுகிறது. வாரம் இருமுறையாவது ஈட்டிங் டைம்டேபிளில் இட்லி இருக்கட்டும்.

புரோ-பயாடிக் (Pro-Biotic) உணவு வகைகளில் தயிர், மோர், புளித்த இட்லி போன்றவற்றைச் சேர்க்கலாம். லஸ்ஸி என்பது புளிக்க வைத்த பாலும், தயிரும்தானே! சிலர் புளிப்பு என்பது வயிற்றுக்குக் கெடுதல் என்பதுண்டு. அப்படியில்லை. இந்தப் பட்டியலில் உள்ள பொருட்கள் வயிற்றுக்கு நன்மை அளிக்கக்கூடியவை.

குடல் நோய் வந்தவர்களுக்கு பழைய சாதத்தைச் சிபாரிசு செய்வதுண்டு.

''ஐயே, பழையதைச் சாப்பிடுவதா?'' என்று முகம் சுளிப்பவர்கள் லஸ்ஸியை அருந்துங்கள்.

இப்போதெல்லாம் பள்ளிப் பருவத்திலேயே தாறுமாறாக உடல் பருத்துப்போய் இருப்பவர்கள் அதிகமாகி வருகிறார்கள்.

இப்படிப்பட்டவர்களுக்கு நேரக்கூடிய பாதிப்புகள் குறித்தும் அவர்கள் உணவு விஷயத்தில் தங்களை எப்படி மாற்றிக் கொள்ளலாம் என்பது குறித்தும் அடுத்த இதழில் பார்க்கலாம்.

(தொடரும்)

எழுத்து வடிவம் : **ஆதர்ஷ்**

**டாக்டர் எம். ராஜேந்திரன்**



அடுத்த கல்கி இதழ் முதல்...
புண்ணியம் நல்கும் பெருமாள் தலங்கள்
-ஓர் ஆன்மிகப் படப்பிடிப்பு
வேளுக்குடி கிருஷ்ணனின்
கற்கண்டு தமிழில்...
கண்ணனைத் தேடி..!
தயாராகுங்கள்
புத்தம் புது
பயணத்துக்கு...
உடன் வருவோர் : வண்ணப்பட ஸ்ரீஹரி, வரைபட வேதா




# "யாதும் ஊரே யாவரும் கேளிர்"

D. அருண் பிரசாத்
உரிமையாளர் - ஸ்ரீ அலமேலு டிராவல்ஸ்

நான் விழுப்புரத்தில் அலமேலு டிராவல்ஸ் என்ற பெயரில் டிராவல்ஸ் நடத்தி வருகிறேன். ஸ்ரீராம் சிட்ஸ் விழுப்புரம் கிளையில் கடந்த நான்கு ஆண்டுகளாக சந்தாதாரராக உள்ளேன்.

எனது தொழிலை அபிவிருத்தி செய்ய ஸ்ரீராம் சிட்ஸை அணுகி, வணிக நிதியுதவியாக ரூ.10 இலட்சத்தை குறைந்த வட்டியில் மிக எளிதாகவும், விரைவாகவும் பெற்று, அதைக் கொண்டு டாடா இண்டிகா கார் ஒன்றையும், குவாலிஸ் வேன் ஒன்றையும் வாங்கினேன். புதிய வண்டிகளின் வரவால் எனது டிராவல்ஸ் தொழிலில் வருமானம் ரூ.20,000 வரை அதிகமாயிற்று. இன்று மிகவும் இலாபகரமாக தொழில் நடத்தி வருகிறேன். யாதும் ஊரே யாவரும் கேளிர் என்பது போல டிராவல்ஸ் தொழிலில் தினமும் புதியவர்கள், புதிய அறிமுகங்கள் கிடைக்கின்றன.

**ஸ்ரீராம் சிட்ஸ்**
தமிழ்நாடு பிரைவேட் லிமிடெட்

கிரீம்ஸ் துவார், 149 கிரீம்ஸ் சாலை,
சென்னை 600006 • போன்: 4223 6000

---

ஸ்ரீராம் சிட்ஸ் சித்திரை சீட்டு விழாவில், சிறுதொழில் அதிபர்களை அடையாளம் கண்டு கௌரவிக்க விழைந்துள்ளோம். அதன் மூலம் மக்களிடம் குறிப்பாக இளைய தலைமுறையினரிடம் தொழில் முனைவு ஆர்வத்தை ஊக்குவித்து சுயவேலை வாய்ப்பை உருவாக்க விரும்புகிறோம்.

அருகிலுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் கிளைக்கு வாருங்கள். உங்கள் ஊரிலுள்ள தொழிலதிபரை நீங்களே தேர்ந்தெடுத்து கௌரவிக்கும் அரிய வாய்ப்பைப் பெறுங்கள். ஸ்ரீராம் நிறுவனங்களின் சேவையை பயன்படுத்தி நீங்களும் வெற்றிகரமான தொழிலதிபராகுங்கள்.

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57 Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.